# ஆவிக்கோர் பற்றுக்கொம்பு



முனைவர் T.S. ராமஸ்வாமி

# ஆவிக்கோர் பற்றுக்கொம்பு

முனைவர் டி. எஸ். ராமஸ்வாமி

41/2, தேரடித் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005
தொலைபேசி: 2844 2526

பதிப்பு 2003

விலை ரூபாய் 30/=.

மேலட்டையில் :
மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வார், நாதமுனிகள்

அச்சிட்டோர்
ஜி.எல்.கிராபிக்ஸ்
86, ஜெனரல் பேட்டர்ஸ் ரோடு
சென்னை - 600 002

# அணிந்துரை

செந்தமிழ் வேதியர், 'திருமால்' ஆசிரியர்
குமாரவாடி சே. இராமாநுஜாசாரியர்



படிக்கிறவர்களைப் பக்கு வப்படுத்துவதே நூல் பயனாகும்.

நூல் பல கற்றும் மனிதன் மாறவில்லை என்றால் அந்த நூல்கள் கை துடைக்கும் கருணைகளே.

கல்விகரையில, கற்பவர் நாள் சில, ஆகவே, 'கற்பவை கற்க' என்ற வரையறை தேவை. பல நூல் படித்துப் புலமை பெறுவதைவிட, சில நூல் சுசடறக் கற்று மனிதன் ஆன்மீக மேன்மையுறுவதே சிறப்பு.

அத்தகைய சிறப்பு அடியேனது நண்பர் வைஷ்ணவ முனைவர் ஸ்ரீ. டி. எஸ். ராமஸ்வாமியின் இந்நூலால் ஏற்படும் என்பது திண்ணம்.

"கோல்தேடி யோடும் கொழுந்ததே போன்றதே மால் தேடியோடும்" மனம் படைத்தோருக்கு இந்நூல் 'ஆவிக்கோர் பற்றுக் கொம்பாக' உதவும்.

'திருமால்' இதழில் வெளி வந்தனவாதலால் அவனதருள் திறனை இந்நூலில் காணலாம்.

பிராட்டியை முன்னிடும் ஸ்ரீவைஷ்ணவ மரபை யொட்டி புருஷகாரமாக "நூலாட்டி" கட்டுரை அமைவதும், அடுத்து 'மாரி இன்பமாரி' 'அவன் அருளல்லது அருள் அல்ல; பல்லார் அருளும் பழுது' என்பதற்கு ஏற்ப, அவனது அருளே உய்வுபாயம். என்பதை உணர்த்துவதும் இதற்குச் சான்றாகும்.

அடுத்த கட்டுரை, அவன் அருளைப் பெறும் இந்த ஜீவனின் தன்மைக்கு ஏற்ப, அவன் மெய்யனாயும் இதன் முடிவில் பொய்யனாயும் அமைவதைக் காட்டுகிறது. அது

சரி! நம்மில் எத்தனை பேர் துரியோதனர்கள்? எத்தனை பேர் அர்ஜுனர்? என்ற நூலாசிரியரின் கடைசி வரி கேள்வி வாசகர் நெஞ்சில் என்றும் நிலைபெற வேண்டும்.

ஒரு பெண்மணி தொடர்ந்த வழக்காகக் கருதி, வக்கீல் நீதிபதியாக மாறி தீர்ப்பு அளிப்பது "காதல் மற்று யாதுமில்லை" என்ற கட்டுரை. "பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை" உண்மை; அதுவே, பெருஞ்செல்வம் நெருப்பாக அமைவதையும் உணர்த்துகிறார் முன்னோர் மொழிந்த முறையில் ஆசிரியர். "நிலையாமையே நிலை"யின் இழிவை எடுத்துக் காட்டுவது 'ஈமின் கோமின்' கட்டுரை.

அடுத்து எட்டாவது கட்டுரையில் நமக்கு எட்டாத 'உள்ளுறை' தத்துவத்தை விளக்குகிறார் கட்டுரையாளர்.

வழக்குரைஞராகி, 'குற்றமும் குறையும்' பற்றிய விளக்கம் அளிப்பது பலருக்குத் தெளிவு தரும்.

கட்டுரைத் தொகுப்பில் நகைச்சுவை அமையும் கருத்தில் முகத்துதி மந்திரம், 'புத்திசாலி யார்?' என்ற தலைப்பில் இரண்டு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

ஸ்ரீவைஷ்ணவ இலக்கணத்தை 'நீ ஆந்தராளிகன்' என்ற தலைப்பில் வகுத்து, மிளகாழ்வானை காட்டுகிறார். 'நம் முன்னோர் வாழ்வும் வாக்கும்' எத்தகையன!

'பிறர்மினுக்கம் பொறாமை யில்லாப் பெருமையே' தலையான ஸ்ரீ வைஷ்ணவச் சிறப்பு என்று 'நம்பிள்ளை கந்தாடை தோழப்பர்' சந்திப்பில் காட்டும் குணமேன்மை வாசகர் நெஞ்சில் என்றும் நிழலாடும்.

இத்தொகுப்புக்கு முத்தாய்ப்பாக அமைந்துள்ளது கடைசி கட்டுரை. எதற்கும் முடிவு இனிதாய் அமைய வேண்டுமல்லவா?

'துளிர் எழுப்பும் ப்ரீதி'யோடு இந்நூல் நமக்குப் பரம புருஷார்த்தத்தை உணர்த்தி நிறைவுறுகிறது. ஒவ்வொருவர் கரங்களிலும் திகழ வேண்டிய ஓர் அரிய நூல் இது.

# முன்னுரை

இறைவனைப் பற்றிய அறிவு பெற வேண்டும், அதை வளர்க்க வேண்டும் என்கிற விருப்பம் இயற்கை யானதே. ஆனால், கொஞ்சம் ஞானம் பிறந்தவுடன் ஏதாவது பேச வேண்டும், எழுத வேண்டும், பலர் பாராட்ட வேண்டும் என்ற ஆசை எழுவது சரியா? தெரியவில்லை.

ஆழ்வார்கள் சொல்லாததை, பூர்வாசார்யர்கள் எழுதி வைத்துவிட்டுப் போகாத எதையும் யாரும் பேச முடியாது, எழுத முடியாது. ஆனால், காலங்கள் மாறும் போது, வேகம், வேகம் என்று மனிதன் எங்கோ ஓடிக்கொண்டிருக்கும் போது, அவனைச் சற்று நிறுத்தி, அவன் கவனத்தைத் திருப்புவதற்கு, சுருக்கமாகவும், எளிமையாகவும் சொல்ல வேண்டி யிருக்கிறது.

தெரிந்ததைக் கொட்டிவிட வேண்டும் என்ற ஆர்வத்தில், 'திருமால்' பத்திரிகையில் சில கட்டு ரைகள் எழுதினேன். 'செந்தமிழ் வேதியர்' தயவால் பிரசுரிக்கப்பட்ட கட்டுரைகள் நூல் வடிவமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.. ஒரு யானையை ஆறு குருடர்கள் விவரித்தது போல, அடியேனும் எம்பெருமானைப் பற்றி எழுத முற்பட்டேன்.. கல்லாதது உலகளவு, கடக்க வேண்டிய படிகள் ஏராளம் என்பதை நன்றாக அறிந்திருந்தும் எழுதத் துணிந்தேன், பெரியவர்கள் பொறுத்தருள்வார்கள் என்ற நம்பிக்கையில்.

தாஸன்

டி.எஸ்.ராமஸ்வாமி

# இந்நூலில்...

# ஆவிக்கோர் பற்றுக்கொம்பு

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் இறைத் தத்துவங்கள் ஏராளம். ஆழ்ந்து நோக்கின், அதில் இல்லாத தத்துவங்களே இல்லை எனலாம்,

**கூவிக்கொள்ளாய்வந்தந்தோ! என்பொல்லாக் கரு**
**மாணிக்கமே,**

**ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலால் அறிகின்றி**
**லேன் யான்...**

*(10 - 10- 3)*

உயிர், உடல், கடவுள் என்கிற மூன்று தத்து வங்களுக்குள்ளே எல்லாமே அடங்கிவிடும்.

இதையே சித், அசித், ஈசுவரன் என்கிற 'தத்வத்ரயம்' என்று கூறுவர்.

உடலுக்கு பற்றுக்கோலாக மனைவி (அல்லது கணவன்), மக்கள், இன்னும் பலப்பல 'அசித்து'க்கள்.

உயிரின் பற்றுக்கோலாக இருப்பவன் இறைவன்,

உயிர் இறைவனைப் பற்றாதபோது, தேகத்தின் ஆட்சி வலுப்பெற்று, மனிதன், ஐம்பெரும் பகைவர் களாக இருக்கும் ஐம்புலன்களுக்கு ஆட்பட்டு, சம்சாரம் என்கிற ஆழ்கடலில் மூழ்கி, தத்தளித்துத் திண்டாடித் திணறிப் போகிறான்.

உயிர் (ஆவி, ஆத்மா) எப்படி இறைவனைப் பற்ற முடியும்?

முதல் வழி: சிறிதும் இடைவெளியின்றி, தொடர்ந்து இறைவனிடம் பக்தி செலுத்துவது.

அதாவது, அவனையே நினைத்து தியானம் செய்து கீதையில் பகவான் அருளிய பக்தியோகத்தைச் சரிவரச் செய்வது. இது மிகச்சிறந்த உபாயமாயினும் எல்லோராலும் செய்ய இயலாது. மிகமிகச் சிலரே இந்த யோகத்தைச் செய்ய முடியும்.

ஒரு தாய், தன் மகள் இறைவனை நினைத்துத் துடிப்பதை ஆழ்வார் எவ்வளவு அழகாகக் கூறுகிறார்!

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்,
சங்குசக்கரங்கள் என்றுகை கூப்பும்
'தாமரைக் கண்' என்றே தளரும்,
'எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டென்னும்
இருநிலம் கைதுழா விருக்கும்,
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்!
இவள்திறத்து என்செய்கின்றாயே?

மற்றொரு இடத்தில் பக்தி முற்றிக் கதறுகிறார்.

ஆடியாடி அகம்கரைந்து, இசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல்கி, எங்கும்
நாடிநாடி நரசிங்கா என்று,
வாடி வாடும் இவ் வாணுதலே.

(2-4-1)

பரபக்தி, பரஞானம், பரமபக்தி என்கிற மூன்று வெவ்வேறு நிலைகளில் ஆழ்வார் இறைவனை 'சிக்'கெனப் பற்றி தன் பக்தியின் முதிர்ச்சியை வெளிப்படுத்துகிறார்.

ஆனால், சாமான்யர்களாகிய நாம் ஆழ்வாரின் பக்தி நிலையை எட்ட முடியுமா?

இறைவனிடம் பற்று கொள்ள இரண்டாவது வழி, அவனை முழுமையாக சரணாகதி அடைவதே.

தேர்த் தட்டிலே கண்ணன் அர்ஜுனனுக்கு கீதோபதேசம் செய்யும்போது,

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஸரணம் வ்ரஜ!
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி
மாசுச

என்று அருளிச் செய்கிறார். "(எதுவும் மோட்சம் தராது என்பதால்) எல்லாவற்றையும் விட்டுவிட்டு என்னையே புகலாகப் பற்று" என்று உத்தரவிடுகிறார்.

ஆழ்வாரும் சிறப்பாக அருளிச் செய்கிறார்.

'அகல கில்லேன் இறையும்' என்று அலர்மேல் மங்கை
யுறைமார்பா,
நிகரில் புகழாய்! உலகமூன்று உடையாய்! என்னை
ஆள்வானே,
நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும்
திருவேங்கடத்தானே,
புகலொன் றில்லா அடியேனுன் அடிக்கீழமர்ந்து
புகுந்தேனே.
*(6-10-10)*

ஆனால் சரணாகதி என்பது அவ்வளவு எளிதான செயலல்ல. சரணாகதி செய்யும் தகுதி பெற இரண்டு நிபந்தனைகள்.

முதலில், எல்லாவற்றையும் விட்டு விட்டு அவனையே பற்ற வேண்டும். இது சாத்தியமா? நாம் எதையும் விட்டு விடத் தயாராய் இல்லை, ஐம்புலன்களின் தாண்டவங்களைக் கட்டுப் படுத்த

முயற்சியும் செய்வதில்லை. இறைவனைப் பற்ற வேண்டும் என்ற விருப்பம் எப்படி ஈடேறும்?

இரண்டாவதாக, "எனக்கு வேறு கதியில்லை, நீயே கதி" என்ற உறுதியுடன் - மஹாவிசுவாசத்துடன் - அவன் திருவடிகளிலே விழ வேண்டும். அதாவது total surrender without reservations.

ஆனால், இறைவனின் அருளை மட்டும் நம்பாமல், நம் புத்தியிலே உதிக்கும் பலவித மாற்றுச் சிந்தனைகளால் குழம்பிப் போய், அரைகுறை நம்பிக்கையுடன் அவனை வணங்குகிறோம் - சில அற்ப பலன்களை அடைவதற்காக.

ஆக, சரணாகதி செய்யவும் நாம் தகுதியற்று இருக்கிறோம்.

ஈசுவரனைப் பற்ற மூன்றாவது வழி கைங்கர்யம். அதாவது தொண்டு செய்தல்.

ஆழ்வார் அருளுகிறார்

... தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுக,
பண்டே பரமன் பணித்த பணிவகையே.

(10-4-9)

எம்பெருமானுக்குத் தொண்டு செய்வதற்கு இலக்கணமாகத் திகழ்ந்தவன் இலட்சுமணன். இராமனுக்கு "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை" செய்தவன் அவன்.

தொண்டே செய்து வாழ்நாளைக் கழித்த இலட்சுமணன், பரதன், சத்ருக்னன் போல்வாரை, ஆழ்வார் "சயமே அடிமைத் தலைநின்றார்" என்றும் "கோதில் அடியார்" என்றும், "நீக்கமில் அடியார்" என்றும் சிறப்பாக அருளிச் செய்கிறார்.

தொண்டு என்பது பகவானுக்கோ, ஆசார்ய னுக்கோ, பக்தியில் ஊறிய பாகவதர்களுக்கோ, யாருக்குச் செய்தாலும் எல்லாம் பகவானிடமே சென்று அடைகிறது.

"பிறர் நோவு கண்டால் 'ஐயோ' என்று அனு தாபப்பட்டு உதவுபவனே ஸ்ரீவைஷ்ணவன்", பிறப்பி னால் ஒருவனின் ஸ்ரீவைஷ்ணவத்தை நிர்ணயிப் பதில்லை. நடத்தையினால், அனுட்டானத்தினால், செய்யும் தொண்டினாலேயே ஒருவன் ஸ்ரீவைஷ்ண வனாகிறான் என்பது பெரியோரின் தீர்மானம்.

ஆகவே, பலனை எதிர்பாராத தொண்டின் மூலமாகவும் இறைவனைப் பற்ற முடியும், பாம்பின் நாக்கில் முள் தைத்து அது துடித்தபோது, அதனிடம் சென்று முள்ளை எடுத்து பாம்பைக் காத்தவர் கோவிந்தப் பெருமாள் என்கிற எம்பார்.

வாழை இலையை மரத்திலிருந்து பறிக்கும் போது அதில் சொரிந்த நீரைக் கண்டு கண்ணீர் சொரிந்த கூரத்தாழ்வானும் இங்கு வாழ்ந்திருக்கிறார்.

"நான்", "எனது" என்ற அகங்கார மமகாரமற்ற ரிஷிகளும், முனிவர்களும், ஆழ்வார்களும், ஆவிக்கோர் பற்றுக் கொம்பாகிய இறைவனை, பக்தி ஒன்றாலேயே எளிதில் பற்றி உய்வடைந்தார்கள். ஆனால், சாமான்யர்களாகிய நாம், தன்னலமற்ற தொண்டின் மூலமே அவன் அன்பைப் பெற்று, நற்கதியடைய முடியும் என்பது திண்ணம்.

# நூலாட்டி

எம்பெருமான் அனைத்து வேத சாஸ்திரங்களாலும் கூறப்பெறும் முழு வேதத்து அமுதம் ஆனதால் அவனுக்கு "நூலாளன்" என்று பெயர் வாய்த்தது.

நூலாளன் என்ற சொல்லுக்கு பெண்பால் "நூலாட்டி" என்பதாகும்.

"பெரிய பிராட்டியாரே! வேதங்களும், அதன் அங்கமான சாஸ்திரங்களும் எல்லாம் கூடி உமது திருக்கல்யாண குணங்களையே கூறுவதாகப் பெரியோர் கூறுவர்" என்று பட்டர் ஸ்ரீ குண ரத்ந கோசத்திலே அருளிச் செய்தார். எல்லா நூல் களாலும் முக்கியமாகக் கொண்டாடப் படுவதனால், பிராட்டிக்கு "நூலாட்டி" என்ற பெயர் பொருத்த மாக விளங்குகிறது.

திருமழிசை ஆழ்வார், நான்முகன் திருவந்தாதி யில்,

"வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன் கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண்"

என்று அழகாக அருளிச் செய்கிறார்.

பரம்பரையாக ஓதப்பட்டு வருகின்ற சாஸ்திரங் களாகிற நூல் வ்லையிலே, யாராலும் அசைக்க முடியாதபடி அகப்பட்டவன் எம்பெருமான்.

அந்த எம்பெருமான் திருவடிகளாகிற வலையிலே ஆழ்வார் சிக்கிக் கொண்டாராம்.

அது அவருக்கும் நமக்கும் ஓர் இனிய அனுபவமாகும்.

உடையவரும் (இராமாநுஜரும்) நூலாட்டி சேர்வன் சரணுக்குமுன் நூலாட்டியின் திருவடிகளாகிற வலையிலே சிக்கிக் கொண்டவரே.

சரணாகதி கத்யத்திலே, முந்துற முன்னம் **"அநந்ய சரண: சரண மஹம் ப்ரபத்யே"** என்று ஸ்ரீயை — பிராட்டியை — சரணம் புகுகிறார்.

ஸ்ரீ வேதாந்த தேசிகரும், ஸ்ரீஸ்துதியில் பிராட்டியை, **"வேதங்கள் தேடியலையும் உன் மஹிமை"** என்றும்,

**"வேதங்களுக்கெல்லாம் விசித்ரசிரோ பூஷணமான உன் திருவடி இரண்டையும்"** என்றும்,

**"வேதங்களுக்கு மௌளி மந்தார மாலையாகவும்"**

என்றெல்லாம் நூலாட்டி பெருமையைக் கொண்டாடுகிறார்.

நூல்களில் சிறந்தது ஸ்ரீராமாயணம். "இதிகாச ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணம் சிறை இருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது" என்கிறது ஸ்ரீவசனபூஷணம்.

ஸ்ரீராமாயணத்தில் பிராட்டியின் க்ருபை, பாரதந்த்ரயம், அநந்யார்ஹத்வம் ஆகியவைகள் புருஷகாரமாம்போது (நமக்காக எம்பெருமானிடம் சிபாரிசு செய்யும்போது) பிரகாசிப்பதைக் கொண்டு,

"ஸ்ரீ", "திரு", "மஹாலக்ஷ்மி" ஆகிய பெயர்களால் அழைக்கப்படும் நம் தாயாரே நூலாட்டி என்பது தெளிவாகிறது.

பக்தியுடன், தமிழையும் தத்துவத்தையும் இணைத்து வளர்த்தவர்களில் ஈடு இணையற்றவர்கள் ஆழ்வார்கள் என்பதும் உறுதிப்படுகிறது.

# மாரி – இன்ப மாரி

எம்பெருமான் வேதங்களை வெளியிட்டான். பற்பல அவதாரங்களில் தனது கல்யாண குணங்களை உணர்த்தினான். நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான் என்று பலவாறாக திவ்ய தேசங்களில் அர்ச்சை வடிவில், நமக்காகக் காத்திருக்கிறான். நாம்தான் திருந்தவே இல்லை!

"நம்மைத் திருத்தி ஆட்கொள்வது அவன் கடமை; நாம் எந்தவிதமான முயற்சியும் செய்ய வேண்டியது இல்லையே". என்பது சரியல்ல.

மரம், கரி, கல் போன்று அசையாமல் கிடப்பதற்கு நாம் அசேதனப் பொருள்களல்ல; சேதனர்கள். அறிவுள்ள ஜீவன்கள். அவன் நமக்கு அறிவைக் கொடுத்துள்ளதால், நமக்கும் அந்த அறிவைக் கொண்டு ஆற்ற வேண்டிய கடமைகள் உள்ளன. தன்னை வணங்க அளித்த ஐம்புலன்கள் கொண்டு எம்பெருமானைப் பெற வேணுமென்ற ருசி நமக்கு இருக்க வேண்டும். அந்த ருசி இருந்தாலே போதும்; அவனை அடைய அவனே உபாயமாக நின்று அருள்வதால் நாம் செய்ய வேண்டிய முயற்சி எதுமில்லை.

சாத்திரங்கள் அனைத்தின் சாரமான பொருளை, பூதத்தாழ்வார் மிக அற்புதமாக இரண்டாம் திருவந்தாதியில் அருளுகிறார்.

தனக்கடிமை பட்டது தானறியானேலும்
மனத்தடைய வைப்பதாம் மாலை - வனத்திடரை
ஏரியாம் வண்ணம் இயற்றும் இதுவல்லால்
மாரியார் பெய்கிற்பார் மற்று

காடும், புதருமாக இருக்கும் மேட்டு நிலத்தை, மழைநீர் வீணாகப் போய் விடாமல் தடுக்க, ஏரியாகப் பள்ளம் வெட்டுதல் நம்மால் முடியும்.

ஆனால் அதை நிரப்ப மழை பெய்யும்படி செய்ய வல்லார் யார்? எம்பெருமான் ஸங்கல்பத்தால்தானே அது சாத்தியமாகும்?

அதே போல், "நாம் அடிமைகள், அவனே எஜமானன்" என்ற உணர்வுடன், நம் மனத்தைச் செம்மைப்படுத்தி பாங்கான நிலையில் வைத்துக் கொள்வது ஒன்றே நாம் செய்ய வேண்டுவது. ஆனால், அப்படி நாம் செய்வதே, அவனை அடைய உபாயம் ஆகிவிடாது. அப்படி நம்மைச் சீர்திருத்திக் கொண்டால், ஒரு வேளை பகவான் நம்மைத் திருவுள்ளம் பற்ற வருவானாகில், அவன் நம்மிடத்தில் நன்கு தங்குவதற்கு, அந்தச் சீர்திருத்தமே பாங்காக அமையும்.

இந்த இடத்திலே பூதத்தாழ்வார், பகவானின் அருள், ருசி உடைய சேதனருக்குக் கிடைப்பதை, "மாரி பெய்கை" என்கிறார்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (4-5-10)

"உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும கிடந்தும் நின்றும்
கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும் மணம் கூடியும்
கண்ட ஆற்றால் தனதே உலகு என நின்றான்தன்னை
வண்தமிழ் நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்பமாரியே"

என்று அருளுகிறார்.

"எம்பெருமான் விஷயமாக திருவாய்மொழி பாடுவதற்கு பாக்கியம் பெற்றேன். இத் திருவாய் மொழியானது தொண்டர்க்கு ஆனந்தத்தைப் பொழி யும் மேகமாக உள்ளது" என்று தன் திருவாய்மொழி யை "இன்ப மாரி" என்கிறார் ஆழ்வார்.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் ஆசார்ய ஹ்ருதயத்திலே, "இன்பமாரி ஆராய்ச்சி" என்ற இடத்திலே, "இன்பமாரி" என்பதற்கு, "திருவாய்மொழியின் மூலம் பேரானந்தத்தைப் பொழியும் மேகமான ஆழ்வார்" என்பது வியாக் யானம்.

ஆகவே, மேற்சொன்ன ஆழ்வார் பாசுரத்திலும், "அடியார்க்கு இன்பமாரியாகிய நான் வண்தமிழ் நூற்க நோற்றேன்" என்றும் பொருள் கொள்ளலாம்.

ஆகவே, நம்மாழ்வாரின் "ஹ்ருதயத்தை" அறிந்து கொண்டு "திருவாய்மொழி" என்கிற "இன்பமாரி யை"ப் பொருள் தெரிந்து அனுஸந்தித்தால், "வனத்திடர்" போன்று கிடக்கும் நம் நெஞ்சங்கள் திருந்தி, "திருமால் அருள் தங்கும் ஏரியாக" வைத்துக் கொள்ள முடியும். அப்போது, பகவத் க்ருபை "மாரி"யாகப் பெய்யும் போது, நம் நெஞ்சிலே தங்கி நிலைக்க, ஏற்றதாக அமையும் என்பது தெளிவாகிறது.

இன்ப மாரியை (ஆழ்வாரை அல்லது திருவாய் மொழியை) உறுதியாக நாம் பற்றினால், அருள் மாரியை அவன் பொழியும் போது, நம் நெஞ்சிலே அவன் நிலைத்து நாம் உய்ய வழியுண்டு!

# அவன் மெய்யன்! அவனே பொய்யன்!!

வழக்கறிஞர் நண்பர் ஒருவர் — சைவப்பற்று உடையவர் — ஒருநாள் என் அறைக்கு வந்து மேஜை மீது இருந்த திருவாய்மொழி நூலைப் புரட்டினார். ஒரே ஒரு பாசுரத்தை வாசித்தவர், "ஆஹா! அந்தக் காலத்தில் ஒரு புலவர் இவ்வளவு அழகாகப் பாட்டு பாடி இருக்கிறாரே!" என்று சொன்னார். நான் சிரித்துக் கொண்டே, "ஐயா! அதை எழுதியது சாதாரண புலவரல்ல! நம்மாழ்வார்" என்றேன். அவர், "இந்தப் பாட்டின் முதலிரண்டு வரிகளுக்குச் சரியான பொருள் கூறுங்களேன்" என்றார். அப்போது எனக்கு நினைவு இருந்த வரையில் விளக்கமளித்தேன். நண்பரின் மகிழ்ச்சிக்கு எல்லை யில்லை. "மிகப் பிரமாதம்! (superb)" என்று கூறி னார். ஆனாலும் என் விளக்கம் எனக்கே திருப்தி தரவில்லை. இல்லம் திரும்பியதும் ஈடு வ்யாக்யா னத்தை மீண்டும் ஒருமுறை ஆழ்ந்து படித்தவுடன், "அடடா! இன்னும் நன்றாகச் சொல்லியிருக்கலாமே!' என்று தோன்றியது. அடியேன் நண்பரிடம் சொன் னதையும் சொல்ல மறந்ததையும் சேர்த்துத் தொகுத்து இந்தக் கட்டுரையை வாசகர்களுக்கு அளிக்கிறேன்.

**"மெய்யன்ஆகும்விரும்பித்தொழுவார்க்குஎல்லாம்**
**பொய்யன்ஆகும் புறமேதொழுவார்க்குஎல்லாம்**
**செய்யில்வாளை உகளும்திருக் கண்ணபுரத்து**
**ஐயன்ஆகத்து அணைப்பார்கட்கு அணியனே"** *(9-10-7)*

பிரார்த்தனை என்பது எல்லா மதத்தினருக்கும் பொதுவான ஒரு விஷயம். பகவானைக் கேட்டால் கொடுப்பான், கேளுங்கள் கொடுக்கப்படும்,

கேட்டதைக் கொடுக்கும் தெய்வம்தான் தெய்வம், இல்லையானால் தெய்வமே எதற்கு? எல்லோருமே பதினாறு வகையான செல்வங்களைக் கேட்டுப் பிரார்த்தனை செய்பவர்களே, எல்லாம் கர்மாநுகுணமாகத் தான் நடக்கும் என்பது தெரிந்தாலும்,

". . . தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது
வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்க
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் . . ."

என்று ஆண்டாள் பாடியிருப்பதால், ஆழ்ந்த பக்தி செய்து நம் தீவினைகளைப் போக்கிவிடலாம் என்ற நம்பிக்கை இருப்பதால் பிரார்த்தனை செய்கிறோம்.

கண்ணன் கீதையில் நான்கு விதமான பக்தர்களைப்பற்றி குறிப்பிடுகிறான். இழந்த செல்வத்தை வேண்டியும், புதிய செல்வத்திற்காகவும், ஆத்ம சுகத்திற்காகவும் (கைவல்யம்) பக்தி செய்பவர் களை பகவான் அங்கீகரித்தாலும், நான்காவது வகையான 'ஞானி' எனப்படும் பக்தனையே மிகவும் விரும்புவதாகக் கூறுகிறான். ஏனென்றால், ஞானி எனப்படும் பக்தன்தான் இந்த உலகாதய செல்வங்கள் எதையும் கேட்காமல், பகவானையே பெற விரும்பி கைங்கர்யப் ப்ராப்தியை வேண்டுகிறான்.

". . . எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றை நம்காமங்கள் மாற்று..."

என்று ஆண்டாளும் இதையே பிரார்த்திக்கிறாள்.

ஆக, பகவானிடம் அவனையே விரும்பித்

தொழுபவர்கள் (அநந்யப் பிரயோஜனர்கள்) எல்லாம் ஞானிகள், அவர்களுக்குத் தன்னைக் கொடுத்து நற்கதி அளித்து மெய்யனாகிறான் எம்பெருமான் ஸ்ரீமன் நாராயணன்.

பகவானைத் தவிர மற்ற விஷயங்களை வேண்டி நிற்பவர்கள் 'புறமே தொழுபவர்கள்' . அவர்களுக்கு அவன் தன்னைக் கொடுக்காமல் அவர்கள் கேட்கும் அற்பப் பலன்களைக் கொடுத்துப் "பொய்யனா கிறான்".

**"துயரறு சுடரடி தொழுது எழு என் மனனே"** என்று ஆழ்வார் தன் நெஞ்சுக்கு உபதேசம் செய்து திருவாய் மொழியைத் தொடங்குகிறார்.

தொழுதல் இரண்டு வகை என்கிறார்; இங்கே, பகவானை விரும்பித் தொழுதல் முதல் வகை. அவனோடு கூட வேண்டும் என்று அவனையே விரும்பிப் பிரார்த்தனை செய்தால், அவன் திருவடி களே கதி என்று கிடந்தால் அவன் நம்மை விரும்பி நம்முடன் சேர்வான்; நம் துயரமும் அகலும்.

வழுவிலா அடிமை செய்து அவனையே பெற விரும்பினால்தான்,

**"வாரிக்கொண்டு
உன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்றஎன்னை யொழிய என்னின் முன்னம்
பாரித்து தான் என்னை முற்றப் பருகினான் . . . "**

என்ற நிலை ஏற்படும்.

வேறு பிரயோஜனங்களைக் கேட்டு தொழுதல் இரண்டாம் வகை. அவைகளையும் கேட்டபடி கொடுப்பான். ஆனால் அவன் நம்மைவிட்டு அகன்று நிற்பான்.

இது ஒரு CHOICE. இரண்டில் எது வேண்டும்? அவனே வேண்டுமா? அல்லது நம்மை மயங்கச் செய்யும் செல்வங்கள் வேண்டுமா?

பாண்டவர்கள் கிருஷ்ணனையே சரணமாக அடைந்தவர்கள் கிருஷ்ணனையே தனக்குத் துணையாகக் கொண்டார்கள். ஆகவே அவர்களுக்கு அவன் கடைசிவரை 'மெய்யனா'கவே இருந்தான்.

கிருஷ்ணனுடைய படைத்துணை வேண்டி வந்த துரியோதனனுக்குத் தன் படைகளையெல்லாம் கொடுத்து விட்டு, தான் மட்டும் அர்ஜுனனின் பிரார்த்தனைக்கு இணங்க, பாண்டவர் பக்கம் துணையிருந்து, துரியோதனனை அழித்ததால் பகவான் 'பொய்யனா'கிறான்.

அது சரி! நம்மில் எத்தனை பேர் துரியோதனர் கள்? எத்தனை பேர் அர்ஜுனர்கள்?

# காதல் மற்று யாதுமில்லை?

(அருளிச் செயல்களிலே ஊற்றமுடைய ஒரு பெண்மணி ஒரு நாள் அடியேனிடம் மிகுந்த கோப மாகப் பேசினாள். "கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும் கண்டதோடு பட்டது அல்லால் காதல் மற்று யாதுமில்லை, துணையும் சார்வும் ஆகுவார்போல் சுற்றத்தவர் பிறரும் அணைய வந்த ஆக்கம் உண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர்" (9-1-1) முதலிய பாசுரங்களில் மனைவி மக்களையும், சுற்றத்தவரையும் ஆழ்வார் சாடியது சரியல்ல; மனைவி மக்களும், சுற்றத்தவரும், நண்பர் களும், சில விதிவிலக்குகள் தவிர, ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். ஆகவே, ஆழ்வாரின் இந்தப் பதிகத்தை நான் வாசித்து அநுபவிப்பதில்லை" என்றார். அந்தப் பெண் மணிக்கு அடியேன் அளித்த விளக்கத்தின் சாராம்சம் தான் இந்தக் கட்டுரை).

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் பகவத் கைங்கர் யத்தைவிட பாகவத கைங்கர்யமே சிறந்தது. ஒவ் வொரு ஸ்ரீவைஷ்ணவனுக்குமுள்ள ஒரே உறவினன்— ஒரே பந்து — ஸ்ரீமன் நாராயணனே. பாகவதர் களுக்கு அடிமை செய்தல் என்பது நம் பேற்றின் எல்லை. அதை நமக்கு அருளிய ஸர்வேசுவரனே நமக்கு இயல்பாக உள்ள பந்து; மற்றபடி சம்ஸார வாழ்க்கை யில் உறவினர், பந்துக்கள் எல்லோரும், நமது முன்வினை காரணமாக வந்தவர்கள். ஆகவே தான், நம்முடன் வாழும் மனைவி மக்களையும், உற்றார் உறவினரையும் 'ஆபாச பந்துக்கள்' அதாவது போலி பந்துக்கள் என்றும், ஸர்வேசுவரனே

உண்மையான ஆத்ம பந்து என்றும் கூறுகிறார். இந்த போலி பந்துக்கள் போன ஜன்மத்திலோ, அடுத்து வரப்போகும் ஜன்மத்திலோ, நமக்கு உறவினர்கள் என்பது நிச்சயமில்லை. ஆனால், ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனுக்கும், எல்லாப் பிறவிகளிலும், எம் பெருமான் ஒழிக்க ஒழியாத உறவினனாக இருந்து அவனை வழி நடத்துகிறான். ஆண்டாளும் இதையே, "உன் தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" என்று அருளியுள்ளார்.

நல்ல கோட்பாட்டு உலகங்கள்
மூன்றினுள்ளும் தான்நிறைந்த
அல்லிக் கமலக் கண்ணனை
அம்தண் குருகூர்ச் சடகோபன்
சொல்லப்பட்ட ஆயிரத்துள்
இவையும் பத்தும வல்லார்கள்
நல்ல பதத்தால் மனைவாழ்வர்
கொண்ட பெண்டிர் மக்களே

(திருவாய்மொழி 8-10-11)

'கொண்ட பெண்டிர்' என்ற சொற்களிலே 'கொண்ட' என்பதற்குப் பொருள் 'தங்கள் நினை வையே ஏற்றுக் கொண்ட' என்பதாகும். அதாவது, தாங்கள் ஒன்றை நினைக்க, தம் மனைவி முதலியவர் வேறு ஒன்றினை நினைக்கை அன்றிக்கே குடும்பத் தோடு திருமால் அடியார்க்கு அடியராய் வாழ்வதுவே நல்ல பதம்.

ஒரு நாள் பாகவதர் சிலர், கூட்டமாக திருவனந்த புரத்துக்குப் போகும் வழியில், திருக்கோஷ்டியூரிலே செல்வநம்பியின் திருமாளிகைக்குச் சென்றனர். அப்போது நம்பி வெளியூர் சென்றிருக்க, அவரு டைய நங்கையார், இல்லத்தில் விதைக்காக எடுத்து

வைத்திருந்த நெல்லைக் குத்தி அரிசியாக்கி உணவு தயாரித்து அவர்கள் பசியை ஆற்றினார். பின்னர், செல்வநம்பி ஊரிலிருந்து திரும்பி வந்து, "விதைக்காக வைக்கப்பட்ட நெல் எங்கே?" என்று மனைவியைக் கேட்க, அவள், "பரமபதத்திலே விளைவதற்காக விதைத்து விட்டேன்" என்று விடையளிக்க, செல்வ நம்பியும் விவரம் கேட்டு ஆனந்தமடைந்தார்.

ஆகவே, பாகவத சேவையே யாத்திரையாகச் செல்லும் குடும்பம், "நல்ல பதத்தால் மனை வாழ்வர்" என்பதாகும். ஆனால் அடுத்த திருவாய்மொழியின் ஆரம்பத்தில்,

கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்
தவர்பிறரும்
கண்டதோடு பட்டது அல்லால் காதல்மற்று
யாதுமில்லை
எண்டி சையும் கீழும் மேலும் முற்றவும் உண்டபிரான்
தொண்ட ரோமாய் உய்யல் அல்லால்
இல்லைகண்டீர் துணையே
(9-1-1)

என்று ஆழ்வார் அருளிச் செய்கிறார். ஆழ்வார் நம்மைப் பார்த்து, வேறு பயன் கருதும் ஆபாசங்களைத் தவிர்த்து, அவனே ப்ராப்யன் (பேறு) என்றும், ப்ராபக ஆபாசங்களைக் கழித்து (போலிகளைத் தவிர்த்து) அவனே ப்ராபகன் (பேற்றுக்கு உபாயம்) என்றும் கொள்ளுங்கள், அதாவது "நீங்கள் ஒரு காரணம் பற்றி வந்த பந்துக்களான மற்றோரை விடுத்து, இயல்பாகவே உள்ள (நிருபாதிக) பந்துவான அவனையே பற்றி உஜ்ஜீவிக்கப் பாருங்கோள்" என்று பரோபதேசம் செய்கிறார்.

அதாவது, கொண்ட பெண்டிரோடும், புதல்வர்களோடும், பாகவதர்களுக்கு அடிமை செய்பவர்,

இல்லறத்தை நல்லறமாக்கி வாழ்பவர்கள். ஆனால், ஒரு குடும்பத்தில் பாகவதர்களுக்கு அடிமைப் பட்டிருத்தல் என்கிற ஒத்த தன்மை இல்லாதவர்கள், பயன் கண்டதோடு பட்டவர்கள்; காதல் மற்று யாதுமில்லாதவர்கள்; இவர்களையே

"கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார்
சுற்றத்தவர்பிறரும்
கண்ட தோடு பட்டது அல்லால் காதல்மற்று
யாதுமில்லை"

என்கிறார்.

இத்தகைய மனைவி (அல்லது கணவன்) உற்றார் உறவினர் ஒருவருக்கு அமைந்துவிட்டால், அவர்களோடு எப்படி இணைந்து வாழ முடியும்? அவருக்கு ஒரே துணை "எண்டிசையும் கீழும் மேலும் முற்றவும் உண்ட பிரானே" என்கிறார் ஆழ்வார்.

திரௌபதி சபையில் மானபங்கப் படுத்தப்பட்ட போது, தர்மத்திலே தலை சிறந்தவர்களான ஐந்து கணவர்களும் அவளுக்கு உதவாமல், தலை குனிந்து வெறும் தரையைக் கீறிக்கொண்டிருக்க, அவர்களை நினையாமல் அவள் கிருஷ்ணனையே நினைத்து, 'கோவிந்தா' என்று அழைக்க, அவளுக்குப் புடவை சுரந்த போதிலும், கிருஷ்ணன், தன் பக்தையை இவ்வளவுதூரம் அவமானப்பட விட்டுவிட்டோமே என்று வருந்தி, "தூரத்திலே இருக்கிற என்னைக் 'கோவிந்தா' என்று நினைத்து அழுதாள் என்பது யாதுண்டோ, அது வட்டிக்கு வட்டி ஏறின கடன் போன்று என் மனத்தினுள் நீங்கவில்லை" என்று புண்பட்டானன்றோ?

அர்ஜுனன் 'என் காரியங்களை என்னாலே செய்து முடிக்க முடியாது' என்று சோகித்துக் கிடக்க,

கண்ணன், 'எல்லா பாரங்களையும் எம் தலையிலே போட்டுவிடு. உன்னுடைய பகைக் கூட்டத்தை யெல்லாம் நாமே போக்கிக் கழிக்கிறோம்' என்றா னல்லவா?

இப்படிப் பல காரணங்களாலே, "அவனே நிருபாதிக பந்து, அவனையே பற்றப் பாருங்கோள்" என்று ஆழ்வார் அருளுகிறார்.

குடும்பத்தோடு பாகவத கைங்கர்யம் செய்பவர்க்கு "காதல் மற்று யாதுமில்லை" முதலிய பாசுரங்கள் பொருந்தாது. கைங்கர்யத்தை இழந்துவிட்டு, இழந்து விட்டோம் என்ற இழவுமின்றிக்கே இருக்கும் உற்றார் நடுவிலே, திண்டாடிக்கொண்டிருக்கும், கைங்கர்ய பரர்களுக்கே ஆழ்வார் உபதேசம் செய்கிறார் என்பதை அறிந்து, எல்லோரும் இணைந்து நல்ல பதத்தால் பகவத், பாகவத கைங்கர்யம் செய்வோமாக!

**மேலாத் தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும்**
**மாலார் வந்து இளநாள் அடியேன் மனத்தே**
**மன்னினார்**
**சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும்**
**நன்மக்களும்**
**மேலாத்தாய் தந்தையும் அவரே இனியாவாரே** *(5-1-8)*

என்கிறார் நம்மாழ்வார்.

குறிப்பு : நீதிமன்றத்தில் ஒரு சட்டத்துக்குப் பொருள் கூறும்போது, "Harmonious construction" என்ற முறையில் விளக்குவர். அது போன்றே இங்கும் முன் பதிக பின் பதிகப் பாசுரங்களை இணைத்துப் பொருள் கொள்ளவேண்டும்.

# பெரும்செல்வம் நெருப்பாக

**கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம்**
**நெருப்பாக**
**கொள்ளென்றுதமமூடும் இவையென்னவுலகியற்கை**
**வள்ளலேமணிவண்ணா உனகழற்கேவரும்பரிசு**
**வள்ளல்செய்தடியேனை உனதருளால்வாங்காயே**
*-திருவாய்மொழி (4-9-4)*

"நெருப்பாக" என்றால் நெருப்பைப் போன்று அடியோடு அழிய என்பது பொருள்; அல்லது தன்னுடைய அழிவுக்குக் காரணமான என்றும் கூறலாம்.

தேவைக்கு மிஞ்சி கொள்ள ஆசைப்படும் செல்வத்தைத்தான் "பெருஞ்செல்வம்" என்று கூறு கிறார் ஆழ்வார்.

மனிதன் அழிவதற்குக் காரணமான பெருஞ் செல்வத்தை மீண்டும் மீண்டும் விரும்புதல் இயல்பு என்னும்படி இருக்கிற இதற்குக் காரணம் யாதோ, இது கண்டு என்னால் பொறுக்க முடியவில்லையே; முதலில், அடியேனை இவைகளிடமிருந்து மீட்க வேண்டும் என்கிறார்.

செல்வம் அழிவுக்கும் காரணமாதல் எப்படி?

"கொள், கொள்" என்று "மொண்டெழுபானை" (ஏற்றப் பானை) போலக் கிளர்ந்து வருகிற எல்லையில்லாத செல்வம், நெருப்பைப் போன்று ஒருவன் அடியோடு அழிவதற்குக் காரணமாகி விடுகிறது. எப்படி யென்றால், "இவன் வாழ்கிறான்" என்கிற இது கேட்டு பொறுக்க முடியாமல்தானே பிறர் இவனைக் "கொள் கொள்" என்று தூண்டி அறிவின்மையினால் மூடப்பட்டவனாய் பேராசை

யினாலே, அழிவுக்குக் காரணமான அச்செல்வத்தை ஆசையுடன் பெறுகிறான்.

நெருப்புக்கு மற்றொரு பெயர் "சேர்ந்தாரைக் கொல்லி". அதைப் போன்றே, செல்வமும், தான் சேர்ந்திருக்கிற மனிதனையே அழித்துவிடுகிறது.

"Where money accumulates, man decays" என்றார் ஓர் ஆங்கில அறிஞர். பெரும்செல்வம் அழிவின் காரணமென்று தெரிந்தும் மீண்டும், மீண்டும் அச் செல்வத்தை அவன் விரும்புவதன் காரணம், அவன் தமோ குணத்தினால் மூடப்படுவதேயாகும்.

'மஹாபாரதத்தில் மஹாஞானியான - மஹா வீரனான - பீஷ்மர் இறந்த பின்னும் துரோணா சாரியர் இறந்த பின்னும், கர்ணன் மடிந்த பின்னும், சல்லியன் ஒருவனே பாண்டவர்களை வென்று விடுவான் என்ற துரியோதனனின் துர் ஆசை அதிகரித்தது'' - மஹாபாரதம் (சல்லிய பருவம்).

"கொள் என்று கிளர்ந்து எழுந்த பெரும் செல்வம் நெருப்பாகக் கொள் என்று தமம் மூடும்" என்கிற இந்த விஷயத்தைக் கண்டு ஆழ்வார், "இவையென்ன உலகியற்கை" என்று வருத்தம் கலந்த வியப்புடன் பாசுரம் அருளுகிறார்.

ஆழ்வார், "பெரும் செல்வம் நெருப்பாக" என்று அருளுகிறாரே ஒழிய "செல்வம் நெருப்பாக" என்று கூறவில்லை.,

ஏனெனில், 'அர்த்தம் (திரவியம்), காமம், தர்மம், மோக்ஷம்' ஆகிய நான்கும் "புருஷார்த்தங்கள்தான்' என்று கூறுகிறது நம் சாஸ்திரம்.

'மன்னுமறம் பொருள் இன்பம் வீடு என்று உலகில் நன்னெறி மேம்பட்டன நான்கன்றே' என்று பெரிய திருமடலும்,

"சேம நல்வீடும் பொருளும், தர்மமும், சீரிய நற்காமமும் என்றிவை நான்கென்பர்" என்று இராமாநுச நூற்றந்தாதியும் விளக்குகின்றன.

'அர்த்தம்' என்றால் "திரவியம்" அல்லது 'தனம்' என்பது பொருள்.

பகவத் பாகவத கைங்கர்யங்களுக்காகச் செலவு செய்யப்படும் தனத்தை ஈட்டல் அவசியமே! அந்த தனத்தை தவறான வழியில் செலவு செய்யும் போதுதான் அது நெருப்பாகின்றது.

ஒரு கூரிய கத்தியை காய்கறி நறுக்கவும் பயன் படுத்தலாம். வன்முறைச் செயலுக்கும் பயன் படுத்தலாம்.

அதாவது 'அர்த்தம்" (தனம்) நல்ல விஷயங்களுக் காகச் செலவு செய்யப்பட்டால் அர்த்தமுள்ள வாழ்க்கை கிடைக்கிறது.

தொண்டரடிப் பொடி ஆழ்வார் திருமாலையில்,

**"தவத்துளார் தம்மிலல்லேன் தனம் படைத்தாரி லல்லேன்"** என்று பாடியுள்ளார். ஆழ்வார் 'பணம் ஈட்டவில்லையே' என்று ஏங்குவது சரியா? அவருக்கு வைராக்யக் குறைவு ஏற்படலாமா?

அவருக்கு முன்பிருந்த பெரியாழ்வார், பாண்டிய மன்னனிடம் பெற்ற பெருஞ்செல்வத்தைக் கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் கோபுரப் பிரகாரம் நிர்மா ணித்தார்.

திருமங்கையாழ்வார் பகவத் கைங்கர்யத்துக் காகவும், பாகவத ததியாராதனாதிகளுக்கும் பல வழிகளில் பணம் ஈட்டி அவ்வளவையும் செலவு செய்தார்.

பழங்காலத்தில் ஜாநச்ருதி முதலானோர் ரைக்வர் போன்ற ஆசார்யர்களுக்கு நிறைய பொருள் கொடுத்து ப்ரும்ம வித்யைகளைக் கற்றனர் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஆகவேதான், கைங்கர்ய ருசி மேலிட்டதாலே, தொண்டரடிப் பொடி ஆழ்வாரும் "தனம் படைத்தாரில் அல்லேன்" என்று குறைப்பட்டுக்கொண்டாரே தவிர, இதில் அவருடைய தகுதியின்மை ஒன்றுமில்லை..

ஆழ்வாரும் மற்றோரிடத்திலே,

"பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில்
போற்றியென்றேற்றெழுவர்
இருள்கொள்துன்பத்தின்மைகாணில்
என்னேயென்பாருமில்லை" - *(9-1-3)*

என்று அருளியுள்ளார்.

"நாம் பிறக்கும்போது கையிலே ஒருகாசு கொண்டு வந்திலோம்; இறக்கும்போது அரை ஞாணையும் அறுத்துக் கொண்டுதான் நம்மைப் போக விடுகிறார்கள். ஏதோ இடையில் சில தாண்ட வங்கள் நடக்கின்றன. எம்பெருமான் நம்மைக் கூடிய மட்டிலும் நல்ல ஸ்திதியில் வைத்திருக்கிறான்; நாமும் நமரும் உண்டு மிகுந்ததை யதாசக்தி ஸத்பாத்ரங்க ளிலே விநியோகித்துக் களிப்போம்" என்று காஞ்சி ஸ்வாமி அவர்கள் சொன்னதை நினைவில் கொண்டு "பெரும்செல்வம் நெருப்பாக" மாறாமல் நம்மைக் காத்துக் கொள்வோமாக.

(திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் — புருஷோத்தம நாயுடு; "உபந்யாஸக ஹஸ்த பூஷணம்" ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது)

# "ஈமின் கோமின்"

பாராளுமன்றத் 'தேர்தல் வந்து விட்டது. பல பெருந்தலைவர்கள் மண்ணிலே உருண்டு முகவரியே இல்லாமல் போகலாம். சில புதியவர்கள் வெற்றி வாகை சூடலாம். இதெல்லாம் ஜனநாயகத்தில் சர்வசாதாரணமாய் நடக்கும் சம்பவங்கள்.

ஆனால் அரசர்கள் ஆண்ட அக்காலத்திலேயே, பல சக்கரவர்த்திகள், குறுநில மன்னர்கள், சிற்றரசர்கள், செல்வச்சீமான்கள், அடிக்கடி நடக்கும் போர்களாலும், வேறு பல காரணங்களாலும், எல்லாவற்றையும் இழந்து, ஒளிந்து, திரிந்து, வாழ்ந்து, முடிந்து போனது உண்டு.

செல்வந்தன் ஒருவன், அறுசுவை உணவை நன்றாக உண்டு, வயிறு நிறைந்த பின்பும் அவனருகில் இருக்கும் பெண்கள், இன்சொற்களால், "இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்கள்" என்று வேண்டிக்கொள்ள, அதை மீற முடியாமல், மேலும் உணவைத் தின்று, "உதிரம் குடித்து வாய் விட்ட அட்டைபோல" பெயர வும், திரியவும் முடியாமல் கிடந்து, புரண்டானாம். பின்பு, அச் செல்வந்தன், காலக் கேட்டினால், ஏழ்மையைத்தழுவும்போது, அதே பெண்கள், வேறொரு செல்வந்தனிடம் சென்று, இனிமையாகப் பேசி, அவனை மேலும் மேலும் உணவு உண்ணும்படி செய்வார்கள். அப்போது, ஏழ்மையில் வாடும் பழைய செல்வந்தன், அவர்களிடம் சென்று, பசி தாங்காமல், "நீங்கள் எனக்கு ஒரு பிடி சோறு கொடுங்கள்" என்று கெஞ்சுவான். முன்பு இன்சொல்லால் கெஞ்சி, இவனை, மேலும் மேலும் உண்ணும்படி செய்தவர்கள், இப்போது கண்டும் காணாதிருப்பார்கள்.

"வாழ்வு என்பது, சாதலை முடிவாக உள்ளது. யவ்வனம் என்பது முதுமையை முடிவாக உள்ளது. செல்வம் நாசத்தை முடிவாக உடையது."

"வாழ்வின் நிலையாமையை நன்கு உணர்ந்து எல்லா ஐஸ்வர்யத்துக்கும் அறிகுறியான திருத்துழாய் மாலையைத் திருமுடியில் உடையவனாய், உலகத்துக்கே காரணனாய் இருப்பவனாகிய எம்பெருமானின் குணங்களைச் சேர்த்து அனுபவியுங்கள்" என்று ஆழ்வார் உபதேசிக்கிறார்.

**ஆமின் சுவையவை ஆறோடடிசிலுண்டார்ந்தபின்**
**தூமென் மொழிமடவாரிரக்கப் பின்னும் துற்றுவார்**
**ஈமின் எமக்கொருதுற்'றென்றிடறுவராதலின்**
**கோமின் துழாய்முடி ஆதியஞ்சோதி குணங்களே.**

(4-1-7)

"எமக்கு ஒரு துற்று ஈமின்" என்றால் எனக்கு ஒரு கவளம் கொடுங்கள் என்றும், "ஆதியஞ்சோதி குணங்கள் கோமின்" என்றால் சர்வேசுவரனுடைய திருக்குணங்களையே சேர்த்து அனுபவியுங்கள் என்றும் அர்த்தம்.

பரமாத்மா ஒரு இனிய பொருள். அறுசுவை உணவை விட்டுவிட்டு, ஆறு குணங்கள் உடைய பகவானாகிற அன்னத்தை உண்ணுங்கள் என்பது கருத்து.

இதே போன்று ஆழ்வார் பெரிய திருவந்தாதியில் (78) "துணைநாள்.......... ஓவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே ஓவாத ஊணாக உண்" என்பதும் நோக்கத் தக்கது.

அம்ருத பலாவளி : என்று பெயர் படைத்த ஸ்ரீ கடிகாசல நரஸிம்ஹ ஸ்தோத்ரத்தை அருளிச்

செய்தவரும், மணவாள மாமுனிகளின் முக்ய சிஷ்யருமான ஸ்ரீதேவராஜகுரு என்னும் எறும்பியப்பா, திருக்கடிகை எம்பெருமானை, அம்ருதம் போல் தித்திக்கும் பழம் என்ற கருத்தில் 'அம்ருத பலம்' என்றருளுகிறார்.

திருமங்கை ஆழ்வார், 'அக்காரக்கனி' என்னும் திருநாமத்தை திருக்கடிகை எம்பெருமானுக்குச் சூட்டுகிறார்.

"தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக்கனியை அடைந் துய்ந்து போனேனே"
(பெரிய திருமொழி, 8-9-4)

மேலும், 'உண்ணும்சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்' என்பது நம்மாழ்வாரின் சிறப்பான அருள்மொழியன்றோ?

ஆசார்ய ஹ்ருதயத்தில், ஸ்ரீ அழகிய மணவாளப் பெருமாள்நாயனார், 'ரிஷிகள் காட்டிலே கிடைக்கும் காயும், கனியுமே உண்டு வாழும்போது, ஆழ்வாருக்கு (உணவு) எல்லாமே கண்ணனிறே' என்று அழகாகக் கூறுகிறார்.

"சுமின்" என்கிற பரிதாப நிலை வராமலிருக்க வேண்டுமானால், எம்பெருமான் திருக்குணங்களைக் "கோமின்" சேர்த்து அனுபவியுங்கள் - என்பது உபதேசம்.

ஸ்ரீ பிரஹலாதாழ்வான், "அந்த பகவானை நினைப்பதில் என்ன சிரமம் இருக்கிறது? நினைத்தால் சுபமங்களத்தைக் கொடுக்கிறார். இரவு பகல் எந் நேரமும் அவரை நினைக்கின்றவர்களுக்கு, பாபங் களின் நாசமும் உண்டாகின்றன" என்கிறார்.

"ஒரு நாயகமாய்...." திருவாய் மொழியில் (4-1-1) 'திருநாரணன் தாள் காலம் பெற சிந்தித்துய்மினோ' என்று ஆரம்பித்த ஆழ்வார், 'அஃதே உய்யப் புகுமாறு.... ஆழ்துயர் போய் உய்யற் பாலரே' என்று தலைக்கட்டுகிறார்.

இதிலிருந்து, பதவி, செல்வம் இவைகளால் ஏற்படும் அகங்கார, மமகாரமெல்லாம் நாசத்தை விளைவிக்கும் பெரிய நோய்கள். அவைகளுக் கெல்லாம் அருமருந்து, ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளைப் பற்றுகையே என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

# உள்ளுறை

எம்பெருமான் எங்கும் வியாபித்துள்ளான். 'உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' என்று ஆழ்வார் அறுதியிட்டுக் கூறியுள்ளார். பரிபாடலில், "அனைத்தும் நீ. அனைத்தின் உட்பொருளும் நீ, ஆதலின் உறைவும் உறைவதும் இலையே" என அழகாகச் சொல்லப்பட்டுள்ளது.

எம்பெருமான் ஒவ்வொருவர் உள்ளத்திலும் உறைகிறான். ஆனாலும் நம் அகக் கண்களுக்குப் புலப்படுவதில்லை. "கட்கிலி" என்றார் ஆழ்வாரும், 'கருதற்கரிய உயிர்க்கு உயிர்' என்ற நிலையும் உண்டு.

அன்றாடம் பல குப்பைகளை மனத்தில் போட்டு நிரப்புகிறோம். ஆகவே அவன் நம் அறிவுக்கு மறைக்கப்படுகிறான்.

"மனம் என்பது ஒரு மிகச் சிறிய அறை. அதிலே அவசியமற்ற பல விஷயங்களைத் திணிப்பதால் நல்ல விஷயங்களெல்லாம் வெளியே தள்ளப்படுகின்றன" என்றார் ஆங்கில இலக்கிய அறிஞர் சர். ஆர்தர் கோனன்டாயில் என்பவர்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் பெரும் புறக்கடல் சூத்திரத்தில், 'ஆழ்ந்து' என்பதற்கு "கடலில் நிலை காண ஒண்ணாதபடி ஆழ்ந்திருக்கும் இடம்போல, எந்தப் பரம்பொருளை ஆன்மா அறியவில்லையோ" என்றும் "கட்கிலி" என்றும் சொல்லுகிறபடியே காணமுடியாத தன்மையாலே அந்தர்யாமியாய் நிற்குமிடத்திலும் என்று வியாக்யானம் செய்யப் பட்டுள்ளது. மற்றோர் இடத்தில் "எம்பெருமான்

வியூகமாக அவதரித்தது மாத்திரம் அன்றிக்கே எல்லா சொற்களுக்கும் தானே பொருளாய், எல்லோராலும் செய்யப்படும் ஆராதனங்களை எல்லாம் ஏற்றுக் கொள்ளுகிறவனாய்க் கொண்டு எல்லா உயிர்களுக்கும் உள்நின்று அவற்றை ஏவுதல் செய்கிற வழியால் பரந்து நிற்கும் நிலையில், அந்தர்யாமித்வ நிலையில், எல்லா உயிர்களுக்கும் உள்ளுயிராய் இருப்பதனாலே, எங்கும் பரந்து நிறைந்துள்ள தன்மையைச் சொல்வதற்காக" என்றும் கூறப்பட்டுள்ளது.

எம்பெருமானின் ஐந்து நிலைகளில் நான்காவது நிலையான அந்தர்யாமித்வம் என்பது "உயிர்கள் தோறும் உள்நுழைந்து நியமிப்பவன்" முதலான வேத வாக்கியங்களில் சொன்னபடி, அனைவருடைய உயிரிலும் - இருதயங்களிலும் கண்ணுக்குத் தெரியாத திருமேனியுடன் நிற்கும் நிலை.

மனத்தை ஒருநிலைப்படுத்தி, இடைவிடாமல், "ஹரி, ஹரி" என்ற தியானத்தில் ஈடுபட்ட ரிஷிகளும், முனிவர்களும் பகவானின் அந்தர்யாமித்வ நிலையைக் கண்டு அனுபவித்தனர்.

வேறு விஷயங்களில் ஈடுபட்டு, எல்லா ஆசைகளுக்கும் அடிமைப்பட்டுக் கிடந்து, சம்சாரத்தில் உழலும் நமக்கோ, கோவில்களிலும், இல்லங்களிலும் விக்கிரக ரூபத்தில் எழுந்தருளியுள்ள அர்ச்சாவதாரமே கதி.

ஆயினும் அவன் நம் உள்ளே உறைகின்றான் என்ற நிலையை மறக்காமலிருக்க வேண்டும். அந்தத் தொடர் நினைவே என்றாவது ஒருநாள் அவனைச் 'சிக்'கெனப் பிடிக்க உதவும்.

பிரகலாதன் மலைமேலிருந்து தள்ளப்படும் போது, தன் இதயத்தை இறுகப் பற்றிக் கொண்டதன் காரணம் தன் உள்ளே உறையும் பகவானுக்கு ஏதும் பாதிப்பு வந்துவிடக் கூடாதே என்ற அளவற்ற பகவத் பக்தியே.

உள்ளுறை - INDWELLER -என்ற பொருள் தவிர, உள்ளே அணியும் உறை INNER GLOVES என்றும் கூறலாம். தற்கால விளையாட்டுப் பந்தயங்களில், குறிப்பாக, கிரிக்கெட் விளையாட்டில், பந்தைப் பிடிக்க மேலுறை தவிர உள்ளுறை ஒன்றை அணிவார்கள். வரக் கூடிய பந்தை நழுவவிடாமல் இறுகப் பிடிக்க அந்த உள்ளுறை உதவுகிறது.

அதைப் போன்றே நமக்கு உள்ளுறையாக இருக்கும் அழுக்கு நீங்கிய மனமும், பகவானை நம் நினைவிலிருந்து நழுவி விடாமல் பற்றிக் கொள்ள உதவுகிறது. காலம் வரும்போது, ஆத்மா மோட்சம் (பரமபதம்) என்ற பந்தை, இறுகப் பற்ற உள்ளே உறையும் பகவான் உபாயமாகிறான் என்பது உறுதி.

# குற்றமும் குறையும்

ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவையை 'வேதமனைத்திற்கும் வித்து' என்று கூறுகிறோம்.

அதேபோல், திருப்பாவையில் பரவிக் கிடக்கும் சொல்லாட்சி , அழகை அநுபவிக்கும்போது, திருப்பாவை தமிழ் அனைத்திற்கும் வித்து என்றுகூட கூறலாமோ என்று தோன்றுகிறது.

**"குற்றம் ஒன்று இல்லாத கோவலர்"** *(11)*

**"அறிவு ஒன்றும் இல்லாத ஆய்க்குலம்"** *(28)*

**"குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா"** *(28)*

அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்தைச் சேர்ந்த கோவலர் குற்றமொன்றில்லாதவர்கள் என்று கூறுவது முரண்பாடோ?

"நாங்கள் சரீர ஆத்ம ஞானமோ, ஜீவ பர ஞானமோ பெற யோக்யதை இல்லாத குலத்தில் பிறந்தவர்கள். எங்களுடைய ஆசாரத்தையும் அறிவையும் பார்த்தாலே, உபாய அநுஷ்டானத்திற்கு தகுதியற்றவர்கள் என்பதை அறியலாம் (unqualified to observe Karma yoga, gnana yoga or bakthi yoga) நீயோ குறையொன்றுமில்லாதவன். இப்பள்ளத்தையும் மேடாக்க வல்லதன்றோ அம்மேடு. எங்களைப் போன்ற குறை உடையவர்களைப் பெறாவிடில் உன் பூர்த்திக்கு விஷயம் ஏது, பெருமைதான் ஏது?'' என்று கண்ணனைப் பார்த்து கோபிகள் கேட்கிறார்கள்.

அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம் என்று தங்கள் தாழ்ச்சியைச் சொல்லி 'குறையொன்றுமில்லாத

கோவிந்தா' என அவன் பூர்த்தியைச் சொல்கிறார்கள். இது சரணாகதிக்கு வேண்டிய ஒரு அம்சம்.

இதையேதான்,

குளித்து மூன்றனலை ஓம்பும் குறிகொள்
அந்தணமைதன்னை
ஒளித்திட்டேன் என்கணில்லை நின்கணும்
பத்தனல்லேன்"

என்று தொண்டரடிப் பொடி ஆழ்வாரும்,

"நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்"

என்று நம்மாழ்வாரும்,

"குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்
நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்
புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன்
புனித நின்
இலங்கு பாதமன்றி மற்றோர் பற்றிலேன் எம் ஈசனே"

என்று திருமழிசைப் பிரானும்,

"நலந்தான் ஒன்றுமிலேன் நல்லதோரறம்
செய்துமிலேன்"

என்று கலியனும் (திருமங்கை ஆழ்வாரும்) அருளி, நைச்சியானுஸந்தானத்தின் (தன்னடக்கத்தின்) எல்லையைத் தொட்டனர்.

கடமைகளைத் தவறாமல் செய்வதற்கு விசேஷ ஞானம் தேவையில்லை. ஆக, அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம் என்பதற்கும் குற்றமொன்றில்லாத கோவலர்கள் என்பதற்கும் முரண்பாடு ஏதுமில்லை.

குறையொன்றும் இல்லாதவன் கோவிந்தன் ஒருவன்தான். மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் குறைகள் இயற்கையாகவே உண்டு.

குறை என்பது கர்ப்பத்திலேயே தோன்றுவது; பெற்றோர்களின் குறைகள், மூதாதையரின் குறைகள் என்று பலவிதமான கலப்பிலே (permutations and combinations) "gene" என்ற விஞ்ஞான முறைப்படி, பிறக்கும்போதே ஒவ்வொருவருக்கும் குறைகள் இருக்கின்றன. அப்படிப் பிறக்கும் போது இருக்கும் குறைகள் வளர்ப்பு முறையாலும், கல்வியாலும், நண்பர்களின் சேர்க்கையாலும், சிறிதளவு கூடுகிறது, அல்லது குறைகிறது; அவ்வளவே.

உதாரணமாக கோபம், பொறாமை, சோம்பல் முதலியன. இந்தக் குறைகளெல்லாம் செயல்பாடாக மாறும்போதுதான் அவை குற்றங்களாகின்றன.

ஒருவனுக்குக் குறை இருப்பது அவனுடைய தவறல்ல; ஆனால் அந்தக் குறையினால் மற்றவர்களுக்குப் பாதிப்பு ஏற்படுத்துவது குற்ற மாகிறது. அந்தக் கட்டத்தில்தான் சமுதாயம் அவனைக் கண்டிக்கிறது. சட்டம் தண்டிக்கிறது. ஆகவேதான் குற்றவியல் சட்டம் (Indian Penal Code) என்கிற சட்டம், குற்றங்களையும் தண்டனைகளையும் விளக்குகிறது. குறை இயல் சட்டம் இயற்ற முடியாது.

உதாரணமாக, ஒருவன் பேராசை என்ற குறையுடையவனாய் இருந்தால் அவனுக்குத் தண்டனை கிடையாது. ஆனால் அந்தப் பேராசை என்ற குறையினால், திருட்டு அல்லது கொள்ளை என்ற குற்றம் புரிந்தால் அப்போது அக்குற்றம் தண்டனைக் குரியதாகிறது.

ஒவ்வொருவருக்கும் உள்ள குறைகளுக்கெல்லாம் தண்டனை என்கிற சட்டம் வந்து விட்டால் - அதாவது, கோபக்காரனுக்கு ஆறு மாதம் சிறை

தண்டனை, பொறாமைப் படுபவனுக்கு ஓராண்டு சிறைத்தண்டனை என்றெல்லாம் சட்டம் வந்து விட்டால், நாம் அத்தனை பேரும் சிறை செல்ல வேண்டியதுதான். ஏனென்றால், குறையில்லாதவன் கோவிந்தன் ஒருவன்தான். எம்பெருமானுக்குத் தாய் தந்தை கிடையாது, மூதாதையர் கிடையாது. அவருக்குக் குறையிருக்க வாய்ப்பேயில்லை. அவர் உயர் வற உயர்நலம் உடையவர் (Embodiment of Perfection).

ஆகவே, குற்றமொன்றில்லாத கோவலர், குறை உடையவர்கள்தான், அறிவொன்றுமில்லாத ஆய்க் குலத்தைச் சேர்ந்தவர்கள்தான். ஆனாலும், கோவிந் தனைப் பெற்ற புண்ணியவான்களான அந்தக் கோவ லர்களும், கோபியர்களும் போல், அவர்கள் எல்லோ ரையும்விட மிகவும் தாழ்ந்தவர்களான நாமும், குறை ஒன்றுமில்லாத அந்தக் கோவிந்தனே கதி என்று அவனுக்கு நித்ய கைங்கர்யங்கள் செய்து கொண்டு கிடப்பதைத் தவிர கடைத்தேற வேறு வழியே இல்லை.

# முகத்துதி மந்திரம்

சாதனை புரிந்த ஒருவனைப் பாராட்டுவதோ புகழ்வதோ தவறாகாது. அப்படிச் செய்வதால் இரு சாராருக்கும் உண்மையான மனமகிழ்ச்சி உண்டாகிறது. இது உலக இயற்கையே. க்யாதியின் மேல் விருப்பம் கூடாது, யாரையும் பாராட்டி அவருடைய அகங்காரத்தை ஏற்றிவிடக் கூடாது என்பதெல்லாம் மிக உயர்ந்த கொள்கையாக இருக்கலாம். ஆனால் அது நடைமுறைக்கு ஒவ்வாதது மட்டுமல்ல, அவசியமில்லாத கட்டுப்பாடும் கூட. ஞானிகளுக்கே அந்த உயர்ந்த விதி பொருந்தும்.

ஆனால், முகத்துதி (Flattery) என்பது விரும்பத்தகாத, வெறுக்கத்தக்க ஒரு விஷயமாகும்.

ஒருவரிடம் உதவி பெறச் செல்லும்போது அவரைப் பார்த்து அவரிடம் இல்லாத குணங்களைக் கூறி அளவுக்கு அதிகமாக முகத்துதி செய்வதைப் பல வகையில் பார்க்கிறோம். யாசகம் கேட்க வருபவர் 'ஜிதந்தே பல்லாண்டு பல்லாண்டு' என்று கூறி காலில் விழுகிறார். கடுமையாக இருப்பவர் மனமும் மாறி விடுகிறது.

ஜூலியஸ் சீசர் என்ற வீரனுக்கு ரோமாபுரி மன்னனாக முடிசூட்டுவதற்குச் சற்று முன்னர், சிலர் அவனை அரச சபையில் கொன்றுவிட சதி செய்கிறார்கள். ஆனால், சீசர் சபைக்கு வராமல் இருந்து விடுவானோ என்ற சந்தேகம் வர, டீசியஸ் என்ற பிரபு தான் போய் சீசரை அழைத்து வருவதாக கூறுகிறான். மற்ற பிரபுக்கள், "சீசர் இங்கு வரத் தயங்குவான்" என்று

கூறுகிறார்கள், அதற்கு டீஸியஸ், "சீசர் வரத் தயங்கினாலோ, மறுத்தாலோ, நான் அவனைப் பலவிதமாகப் புகழ்ந்து பேசி அழைத்து வருகிறேன். நான் அவனிடம், அவன் முகத்துதி செய்பவர்களை வெறுப்பவன் என்று கூறுவேன். அவனும் அதை ஆமோதிக்கும்போது அந்த முகத்துதிக்கு ஆட்பட்டுவிடுவான்'' (When I tell him he hates flatterers, he says he does, being then most flattered" [Shakespeare Julius Caesar Act II part I]) என்கிறான்.

புகழ்ச்சிக்கோ, முகத்துதிக்கோ நீ அடிமையாக மாட்டாய் என்று ஒருவனைப் பார்த்துப் புகழ்ந்தால், அந்தப் புகழ்ச்சிக்கு அவன் உடனே அடிமையாகி விடுகிறான்.

எம்பெருமான், நாம் இரு கைகளையும் கூப்பி அஞ்சலி செய்தால் மனம் இரங்கி விடுகிறான். சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து, தாளும் தடக்கையும் கூப்பி அவன் திருவடிகளைப் பிடித்துக் கொண்டால் நாம் செய்த பாவங்களைப் பொசுக்கி நம்மை ஏற்றுக் கொள்கிறான்.

விபீஷணன் பகவானிடம் சரணாகதி செய்ய வரும்போது, சுக்ரீவன் அவன் சரணாகதியை ஏற்கக் கூடாது என்று எதிர்ப்பு தெரிவித்தான். "விரோதியான ராவணனின் தம்பி விபீஷணனை ஏற்கக் கூடாது" என்று ஆட்சேபம் செய்த சுக்ரீவனிடம் இராமன், "வந்தவன் விரோதியான ராவணனாகவே இருந் தாலும், அவனை அழைத்து வா! அவன் சரணா கதத்தை ஏற்றுக் கொள்வேன்'' என்றான்.

ஆக, வந்து காலில் விழுகிறவன் விரோதியா? பொல்லாதவனா? பாசாங்குக்காரனா? பொய்

சொல்கிறானா? என்பதெல்லாம் முக்கியமல்ல, "அவன் நம் காலில் விழுந்து விட்டாலே அவனுக்கு உதவ வேண்டும்" என்பதுதான் கருத்து.

ஆனால், ஒருவன் நம் காலில் விழும்போது, நம்மை முகத்துதி செய்யும் போது, நம்மிடம் இல்லாத குணங்களை இருப்பதாக வாய் கூசாமல், பொய் சொல்கிறானே! அதை அப்படியே நம்பி மயங்கி நாம் அவனுக்கு உதவி செய்கிறோமே!

ஸமுத்திர ராஜனிடம் வழிவிடச் சொல்லி இராமன் சரணடைந்தும், அந்தக் கடலரசன் மூன்று நாட்கள் வாளாவிருந்தான். இராமன் மிகுந்த கோபம் கொண்டு அவன் மீது கணை தொடுக்கும்போது அவன் பயந்து போய் சரணாகதி செய்ய நாலடி ஓடி வந்தவுடன், இராமன் மனமிரங்கி, " உன் விரோதிகளைச் சொல்லாய்! இந்த அம்பை அவர்கள்மீது தொடுக்கிறேன்" என்றான்.

பட்டர் ஒரு சுவையான ஐதிஹம் அருளிச் செய்கிறார்.

"ஒருசமயம் தலையிலே சிறிதளவு கூட மயிரில்லாத ஒருவன் தன் களத்து மேட்டில் தன் நெல்லை அளந்து கொண்டிருந்தான். அப்போது அவனிடம் ஒருவன் வந்து "உம் தலையிலிருக்கும் இவ்வளவு முடியையும் பேணி வாரிவிட்டுக் கொள்ளாமல் இங்கு தனியே நின்று நெல் அளக்கிறீரே" என்றான். இதைக் கேட்ட அந்த நெல் சொந்தக்காரன், வந்தவன் தன் (இல்லாத) தலைமுடியைப் பாராட்டுகிறானே என்று மிகவும் மகிழ்ந்து அவனுக்கு ஒரு பை நிறைய நெல் பரிசாகக் கொடுத்து அனுப்புகிறான்.

வந்தவன் மகிழ்ச்சியுடன் அந்த நெல்லை எடுத்துச் செல்லும்போது வழியில் ஒருவன், "ஏது இந்த நெல்?" என்று கேட்க, "அந்த மொட்டைத் தலையன் கொடுத்தான்" என்று சொல்லிச் சென்றான். இதைக் கேட்டவன் ஓடிப்போய் நெல் சொந்தக்காரரிடம், "நீ பை நிறைய நெல் கொடுத்து அனுப்பினாயே! அவன் உன்னை மொட்டைத் தலையன் என்று வைதான்" என்று கூற, மிகுந்த கோபம் கொண்ட நெல் சொந்தக் காரன், உடனே ஓடிப்போய் முதலில் நெல் வாங்கிச் சென்றவனைப் பிடித்ததும், அவன், "ஏன்தான் குழல்கள் அலைய அலைய ஓடி வருகிறாய்?" என்று கேட்க, நெல் சொந்தக்காரன் மீண்டும் ஒருமுறை அவன் முகத்துதியால் கோபம் நீங்கப் பெற்று மகிழ்ச்சியடைந்து, "ஒன்றுமில்லை, இன்னும் ஒரு பை நிறைய நெல் எடுத்துக் கொண்டு போ என்று சொல்லத்தான் வந்தேன்" என்றான்.

இப்படி முகத்துதி (Flattery) என்ற மந்திரத்தால் இருமுறை தாக்கமடைந்து மயங்கி உதவி செய்தான் நெல் சொந்தக்காரன்.

இராமனும் ஸமுத்திரராஜன் மீது அம்பு தொடுத்தவன் அவன் சரணடைந்தவுடன் கோபம் தணிந்து அவன் பகைவர்கள்மீது அந்த அம்பை விட்டான்.

எம்பெருமானுக்கும் முன் சொன்ன நெல் சொந்தக்காரனுக்கும் முக்கிய வேறுபாடு, பின்னவன் தன் அறியாமையினால் முகத்துதிக்கு மயங்கி உதவி செய்கிறான். ஆனால் இராமன், 'சர்வக்ஞன்' சர்வ சக்தி படைத்தவன், காலைப் பிடித்தவுடன் சரணாகதியை எற்று கருணையினால் நம் பாபங்களை மன்னிக் கிறான், மேல் விழுந்து உதவி செய்கிறான்.

ஆக, நாம் அவனைப் பார்த்து மனமின்றி, "போற்றி, போற்றி" என்று துதி பாடியோ, மந்திரங்கள் ஓதியோ, அர்ச்சனை செய்தோ அவனை ஏமாற்ற முடியாது. ஆனால் அதே சமயத்தில் மனம், வாக்கு செயல் சுத்தியாக அவன் திருவடிகளைப் பிடித்தால் அவன் அருளுக்கு இலக்காவது திண்ணம்.

"உள்ளம் உரை செயல் உள்ள இம்மூன்றையும்
உள்ளிக் கெடுத்து இறை உள்ளில் ஒடுங்கே"

- ஆழ்வார்.

# புத்திசாலி யார்?

எம்பெருமான் படைத்த இந்தப் பூலோகத்தில் எத்தனை விதமான, விநோதமான, விசித்திரமான மனிதர்கள்?

மிகப்பெரிய அறிஞனின் மகன் புத்திசாலியாக இருப்பான் என்று சொல்ல முடியாது.

"வாத்தியார் பிள்ளை மக்கு" என்பார்கள். அறிவில் குறைந்த அப்பாவின் பிள்ளை புத்திசாலியாய் இருப்பதையும் அடியேன் பார்த்திருக்கிறேன்.

'காஸப்பியான்கா' என்கிற சிறுவன், கப்பல் தலைவனின் மகன், தந்தை சொல் கீழ்ப்படிந்து, கப்பல் பற்றி எரியும்போது அசையாமல் ஒரே இடத்தில் நின்று கொண்டிருந்தான். கப்பல் முழுவதும் எரிந்து போகும் வரையில், மற்றவர்கள் தப்பித்துக் கொள்ள தண்ணீரில் குதித்தபோதும், தான் மட்டும் தந்தை சொல்லை மீறக்கூடாது என்ற காரணத்துக்காக ஒரே இடத்தில் நின்று கொண்டு, எரிகின்ற நெருப்பில் வெந்து மாண்டான். மேற்கத்திய இலக்கியத்தில் அவனை "தந்தை சொல் கேட்ட தனயன்" என்று வெகுவாகப் பாராட்டுவார்கள். ஆனால் அவன் புத்திசாலியா? தந்தை கொடுத்த உத்தரவின் நோக்கத்தையும், சூழ்நிலையையும் புரிந்து கொள்ளாமல் இருந்த இடத்திலேயே கல்லாய் சமைந்து நெருப்பிலே மாண்டு போனானே! அதுவா புத்திசாலித்தனம்?

நம்முடைய பிரகலாதனை எடுத்துக் கொள்வோம். தந்தையின் பேச்சும் கொள்கையும் தவறு என்று அவனுக்கே உபதேசம் செய்து, தந்தை சொல் கீழ்ப்படிய மறுத்து மரணத்தையே வென்றானே, அவனல்லவா புத்திசாலி?

சமீபத்திலே ஒரு நகைச்சுவைக் கதையைப் படித்தேன்.

ஆசார்ய பீடத்தை அலங்கரித்த வித்வான் ஒருவர் தன்னுடைய நான்கு ( சாஸ்திர ஞானம் உடைய) சிஷ்யர்களுடன் ஒரு பெரிய நகரத்தைச் சென்றடைந்தார். அந்த ஊரில் வசித்து வந்த செல்வந்தரான ஒரு சேட்டுக்கு, தம்முடைய வரவை முன்கூட்டியே தெரிவிக்க வேண்டுமென்று கருதி, தன் சிஷ்யன் ஒருவனை அவரிடம் அனுப்பி வைத்தார். அந்த சிஷ்யன் சேட்டின் இல்லத்தை அடைந்து, உள்ளே சென்று, அவரைக் கண்டவுடனே திகைத்துப் போய் சிறிது நேரம் பேசாமல் இருந்தான். சேட்டு மிகப் பருத்த உருவம் கொண்டவராகவும், நுழை வாசற்படி சிறிதாகவும் இருக்கிறதே, இவ்வளவு பருத்த மனிதர் எப்படி இந்தச் சின்ன வாயிற்படி வழியே உள்ளே போயிருக்க முடியும் என்று எண்ணினான். சேட்டு அந்த சிஷ்யனைப் பார்த்து, "நீர் யார்? எதற்காக வந்தீர்?" என்று கேட்க, "சேட்ஜி! நான் வந்த காரணத்தைப் பற்றி பிறகு பேசுகிறேன். முதலில் என் சந்தேகத்தை நீங்கள் தீர்க்க வேண்டும். இந்த பங்களா கட்டின பிறகு நீர் இதனுள்ளே புகுந்திருக்க முடியாது. முன்பே உம்மை உள்ளே உட்கார வைத்து இதைக் கட்டியிருக்க வேண்டும் என்று யூகிக்கிறேன். என் யூகம் சரிதானே? சொல்லுங்கள்?" என்று கேட்டான். சேட்டுக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. ஏதோ கொஞ்சம் பருத்திருக்கிறோமென்றால் இப்படியா நம்மைப் பரிகாசம் செய்வது என்று சீறி எழுந்து, "இந்த ஆளை ஒரு அறையில் அடைத்துப் போடுங்கள்" என்று கட்டளையிட்டார். வேலையாட்கள் உடனே சிஷ்யனை அடைத்துப் போட்டனர்.

ஆசார்யர் நீண்ட நேரம் எதிர்பார்த்தும் சிஷ்யன் திரும்பாததால் இரண்டாவது சிஷ்யனை அனுப்பினார். அந்த சிஷ்யன், வீட்டு வாசலிலேயே, நடந்ததை வேலைக்காரன் மூலம் தெரிந்து கொண்டு, உள்ளே சென்று சேட்டிடம், "சேட்ஜி! சற்று முன் ஒருவன் இங்கு வந்து உம்மிடம் தவறாகக் கேள்வி கேட்டதாகத் தெரிகிறது. அவன் ஒரு முழு மூடன்; ஏதோ ஒருவிதமாக இந்த பங்களாவுக்குள் நீர் புகுந்து விட்டீர்; அதைப் பற்றி இப்போது ஏன் விசாரம்? நாளைக்கு நீர் மரணமடைந்து விட்டால் உம்மை எந்த வழியாக வெளியே எடுத்துச் செல்ல வேண்டும்? என்கிற விசாரமன்றோ இப்போது செய்ய வேண்டும்?" என்றான். இதைக் கேட்ட சேட் மிகவும் கோபம் கொண்டு அவனையும் ஒரு அறையில் அடைக்கும்படி செய்தார்.

ஆசார்யர் காத்திருந்துவிட்டு பின்னர் மூன்றாவது சிஷ்யனை சேட்டிடம் அனுப்பினார். அவனும் சேட்டின் இல்லத்திற்கு வந்து, முன் நடந்த இரண்டு செய்திகளையும் கேள்விப்பட்டு, உள்ளே சென்று, "சேட்ஜி, என்னுடைய நண்பர்கள் இருவர் சற்று முன் இங்கே வந்து, மூடத்தனமாகப் பேசியதைக் கேட்டு வருந்துகிறேன்; நீர் மரணமடைந்தபின் உம்மை வெளியில் கொண்டு போவது என்கிற விசாரம் எதற்கு? சுவர்களை இடித்துவிட்டு வெளியில் எளிதாக எடுத்துக் கொண்டு போகலாமே!" என்றான். அதைக் கேட்ட சேட் முன்னிலும் அதிகமாகக் கோபம் கொண்டு அவனையும் உள்ளே அடைத்து வைத்தார்.

பிறகு, நான்காவது சிஷ்யன் அங்கே வந்து முன்னே நடந்த செய்திகளை வாசலிலேயே தெரிந்து கொண்டு, உள்ளே போய், "சேட்ஜி, எல்லா விஷயங்களையும்

கேள்விப்பட்டேன். என்ன அக்கிரமம்! இவ்வளவு அழகான பங்களாவை இடிப்பதா? அதைவிட நல்ல யோசனையை நான் சொல்கிறேன். நீர் மாண்டபிறகு ஒரு கூரான கத்தியினால் உம்மைச் சதை சதையாக அறுத்து ஒரு கூடையில் போட்டு வெளியேற்ற முடியாதா என்ன? ஒரு கூடைபோதாதென்றால் நாலைந்து கூடைகள்தான் ஆகட்டுமே! இதை விட்டுவிட்டு சுவர்களை இடிப்பதும் வாசக்காலைப் பெயர்ப்பதும் பைத்தியக்காரத்தனம்'' என்றான். சேட்டுக்குக் கோபம் எல்லை மீறிச் சென்றது. நாலாவது சிஷ்யனையும் உள்ளே அடைத்து எல்லோரும் கொடுந் தொழில் புரியக் கட்டளை யிட்டார்.

நான்கு சிஷ்யர்களும் திரும்பி வராமல் போகவே, ஆசார்யர் தாமே சேட்டின் இல்லத்துக்கு ஒடிவந்து, வாசலிலேயே நடந்ததைக் கேட்டறிந்து, திடுக்கிட்டு உள்ளே சென்று, "சேட் ஜி, லௌகீகம் ஒன்றுமறியாத மூடர்கள் என் சிஷ்யர்கள். அவர்கள் பேச்சை நீர் பொருட்படுத்தலாமா! உம்மை அறுத்து கூடையில் போடுவது எவ்வளவு அக்கிரமமான பேச்சு, நீர் மாண்டவுடன் இந்த பங்களாதான் எதற்கு? ஆகவே, பங்களாவோடு சேர்த்து உம்மை எரித்துப் பொசுக்கி விட்டால் வேலை சுலபமாக முடிந்துவிடும்'' என்று ஏதேதோ சொல்லிக் கொண்டு போனார். ஏற்கனவே கோபத்தின் உச்சிக்குச் சென்று விட்டிருந்த சேட், இன்னது செய்வது என்று தோன்றாமல் அதிர்ந்து போய் உட்கார்ந்து விட்டார்.

(ஆதாரம் :- ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் "அபூர்வ ராமாயணம்")

எவ்வளவுதான் வித்வானாய் இருந்தாலும், அவருடைய வித்வத்துக்கும், சாமர்த்தியத்துக்கும் சம்பந்தம் இருக்க வேண்டுமென்கிற அவசியம் இல்லை. Sense வேறு Common sense வேறு. Intellect வேறு Intelligence வேறு.

படகுக்காரனைப் பார்த்து, நட்டாற்றில் படகிலே சென்று கொண்டிருந்த வித்வான், அவனுக்கு சாஸ்திர ஞானம் இல்லாததைக் கிண்டல் செய்யும்போது, படகுக்காரன், "படகிலே தண்ணீர் புகுந்து விட்டது. இப்போது மூழ்கப் போகிறது எனக்கு நீந்தத் தெரியும். உங்களுக்குத் தெரியாதே " என்று கூறிவிட்டு தண்ணீரில் குதித்து விட்டானாம்.

வாழ்க்கைக்குப் புத்தக அறிவும் வேண்டும், பொது அறிவும் வேண்டும்.

நிறையப் படித்தவர் வித்வத் செருக்கு அடைவது இயற்கையே என்று ஸ்ரீ பர்த்ருஹரி சொல்லி இருந்தாலும், அந்த அகங்காரத்தை வெளிக்காட்டாமல் இருப்பது புத்திசாலித்தனம் என்று அவருடைய நன்மையைக் கருதியே கூற வேண்டியுள்ளது.

அவன் அருளால் வரும் அறிவே அறிவு; நம் முயற்சியால் வளர்வது அகங்காரம் மட்டுமே. அவன் க்ருபையால் கிடைப்பதே செல்வம்; நம் யத்தனத்தால் கிடைப்பது மமகாரம் ஒன்றே.

"அவனுடைய அருள் பெறும் போதரிதால்
அவ்வருளல்லன அருளுமல்ல".

# "நீ ஆந்தராளிகன்"

ஸ்ரீவைஷ்ணவனுக்கு எது பெருமை?

பணம், சொத்து சேர்ப்பதா? குழந்தை, குட்டிகள் பெற்று வளர்ப்பதா? வீர தீரச் செயல்கள் புரிவதா? அல்லது புகழ் தேடி அலைவதா?

"ஸ்ரீவைஷ்ணவன்" என்பதே பெருமை.

ஏனெனில், ஸ்ரீமணவாள மாமுனிகள் அருளியது போல, பிறர் மினுக்கம் பொறாமை இல்லாப் பெருமை பெற்றவன் ஸ்ரீவைஷ்ணவன். "கடல் சூழ்ந்த மண்ணுலகம் வாழ வேண்டும்" என்ற பரந்த மனம் கொண்டவன்.

பிறர் நோவு கண்டாலே 'ஐயோ' என்று மன மிரங்கி உதவுபவன் ஸ்ரீ வைஷ்ணவன்.

"தொண்டே செய்து என்றும் தொழுது.. பண்டே பரமன் பணித்த பணி" என்ற கொள்கையைச் செயலில் காட்டுபவன் ஸ்ரீவைஷ்ணவன்.

தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் ஸ்ரீசடகோபனின் திருவடிகளைத் தன் தலைமீது தாங்கி வாழ்பவன் ஸ்ரீவைஷ்ணவன்.

இப்படிப் பலப் பல காரணங்களாலே, 'அடியேன் ஸ்ரீவைஷ்ணவன்' என்ற ஒரு பெருமையே போதும்.

ஆகவே, "நீ ஒரு ஸ்ரீவைஷ்ணவன்" என்று யாராவது கிண்டலாகவோ, நிந்தையாகவோ என்னைப் பார்த்து இழிவுரையாகக் கூறினாலும், அந்தக் காரணத்துக்காகவே கிடைக்க வேண்டிய இந்த லோகாயத பலன்களை எனக்கு மறுத்தாலும், அடியேன் ஏன் வருந்த வேண்டும்?

க்யாதி, லாப, பூஜா பலனைவிட "ஸ்ரீவைஷ்ண வன்" என்ற உணர்வே தொண்டர் குலத்தைச் சேர்ந்த வனுக்குப் பெருமை.

அரசன் எல்லாப் புலவர்களுக்கும் நிலம் தானம் செய்கிறான் என்று கேள்விப்பட்டு, மிளகாழ்வான் என்னும் பெரியவர், தாமும் ஒரு வித்வானாகையாலே, தமக்கும் நிலம் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் அரசனை அணுகினார். அரசன் சைவப்பற்றுடைய வனாதலால் "உமக்கு ஒன்றும் தரமாட்டேன்" என்று கூறிவிட்டான்.

ஏமாற்றமடைந்த மிளகாழ்வான், "ஏன் தர மாட்டீர்? எனக்குத் தர்க்கம் தெரியாதா? மீமாம்சை தெரியாதா? வ்யாகரணம் தெரியாதா? எந்த சாஸ்திரம் வேண்டுமானாலும் பரீட்சை செய்து கொள்ளலாம்" என்று கூற,

அரசன், "உமக்குப் பாண்டித்யத்தில் ஒன்றும் குறைவு இல்லை. நீர் மஹாவித்வான் என்பதை நான் நன்கு அறிவேன்; ஆனால் நீர் ஒரு வைஷ்ணவர், ஆகையாலே தரமாட்டேன்" என்றான். இது கேட்டு மிளகாழ்வான் மிக மிக மகிழ்ந்து, "ஆஹா! நமக்கு உண்மையில் வைஷ்ணவத்வம் இல்லையாகிலும் இந்த அரசன் எண்ணத்தினாலே நமக்கு வைஷ்ணவத்வம் உண்டானதே!" என்று ஆனந்தக் கூத்தாடினார்.

ஆழ்வார், திருவாய்மொழியில் (10-9) ஸ்ரீவைஷ் ணவர்களுக்கு அர்ச்சிராதி கதியும், அங்கங்கே தேவர்களால் செய்யப்படுகிற உபசாரங்களையும் விவரமாக, மிகுந்த அலங்காரத்துடன் அருளிச் செய்கிறார். தமக்கு அவன் செய்து கொடுத்த பேற்றினை, ஸ்ரீவைஷ்ணவர் எல்லோரும் பெற்றாராக;

அதாவது, இங்குள்ளோர், "நமக்கும் ஆழ்வார் பேறு தப்பாது" என்று உறுதியாக நம்புதல்.

"இங்கு வைஷ்ணவர்கள் என்றதே காரணமாகப் பங்கு பெறாதே, திரியுண்ட வைஷ்ணவர்களை அங்குள்ளோர் எதிர்கொண்டு இருப்பிடங்கள் கொடுக்கிறபடி! மிளகாழ்வான் படைவீட்டிலே அகரத்துக்குச் செல்ல, "நீ ஆந்த்ராளிகன், உனக்குப் பங்கில்லை" என்ன, நன்மையில் குறையில்லை; இது அன்றோ காரணம்?' என்ன, 'நம் நெஞ்சில் இல்லை யாகிலும் இவர்களால் 'வைஷ்ணவன்' என்று, கைவிடப் பெற்றோம் அன்றோ?' என்று புடவையை முடிந்து ஏறவிட்டுக் கூத்தாடினார்." - ஈடு.

ஆந்தராளிகன் என்றால் "நடுவே இருப்பவன்" என்று பொருள். அதாவது, 'சம்சாரிகளிலும் சேராது முக்தர்களிலும் சேராது நடுவு நிலையில் இருக்கிற முமுக்ஷு'.

ஆக, உரிமைகள் மறுக்கப்படினும், துன்பங்கள் திணிக்கப்பட்டாலும், நிந்தனைகள் செய்தாலும், நம்மை ஸ்ரீவைஷ்ணவர் என்று ஒப்புக் கொள்வது ஒன்றே கொண்டு ஆனந்தக் கூத்தாடலாம். அதுவே நமக்கு அளவு கடந்த மகிழ்ச்சியும் பெருமையும் தரும் என்பதில் ஐயமில்லை என்கிறார்.

இந்த உணர்வு இயற்கையாக இருக்கும் ஸாத்விக குணத்தால் ஏற்பட்டதல்ல; கோழைத்தனத்தால் அஞ்சி, அடங்கிக்கூறும் சொற்களல்ல; அசாத்ய மனஉறுதியினாலும், திடநம்பிக்கையினாலும், ஆழ்ந்த ஞானத்தாலும், நெஞ்சத்தின் அடியிலிருந்து பீறிட்டுக் கொண்டு வெளிவரும் ஒரு கொந்தளிப்பு.

# பொறாமையில்லாப் பெருமை

"பிறர் மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும் பெற்றோமே!" - ஸ்ரீ மணவாள மாமுனிகள்
(ஆர்த்திப் பிரபந்தம்)

ஆழமான அர்த்தங்கள் பொதிந்த அற்புதமான சொற்கள்.

செய்தித்தாளில், நாட்டின் ஏதோ ஒரு மூலையில், மும்பையிலோ, கோல்கத்தாவிலோ சாதாரணமான ஒருவன் திடீரென்று மிகப் பெரிய கோடீசுவரனாகி விட்டான் என்ற செய்தியைப் படித்தால் எந்த உணர்வும் ஏற்படுவதில்லை. ஆனால், பக்கத்து வீட்டுக்காரனோ, கூடப் பிறந்த அண்ணனோ, தம்பியோ, பெரிய பணக்காரனாகிவிட்டான் என்று தெரிந்ததும் மனதிலே பொறாமை முளைத்துப் பரவி, வெடித்து, முழுவதுமாக ஆட்கொள்கிறது.

ஜூலியஸ் சீசர் என்கிற ரோமாபுரி வீரன் யுத்தத்திலே வெற்றி அடைந்து, பெரும் புகழ் பெற்று, மக்களின் அன்புக்குப் பாத்திரமாகிறான். அதுவரை அவனிடம் மிக நெருங்கிய நண்பர்களாக இருந்தவர்களே அவன் புகழைக் கண்டு பொறாமை கொண்டு, சதி செய்து, அவனை முடிசூட்டு விழாவின் போது கொடூரமாகக் கொன்று விடுகிறார்கள். மிக நெருங்கிய நண்பன் தன்னைக் குத்துவதைக் கண்ட சீசர், "நீயுமா ப்ரூடஸ்" என்று கூறி மனமுடைந்து கீழே விழுந்து இறக்கிறான்.

பொறாமை என்பது உணர்வோடு இருந்தாலும் பரவாயில்லை. அந்த உணர்வு சுடு சொற்களாக -

தூஷணையாக வெளிவரும் போதும், தகாத செயல் களாக மாறும்போதும் தான் மனிதனின் மிருகத்தனம் வெளிப்படுகிறது.

ஒருவரின் வளர்ச்சியைக்கண்டு நாமும் அப்படி வளரவில்லையே என்று ஏங்குவது பொறாமை யாகாது. ஆனால், அவர் வளர்ச்சிக்கு ஏதோ ஒரு குற்றம் கற்பித்து, அவர்மீது வசை பாடுவதுதான், அசூயை அல்லது பொறாமை ஆகும்.

பொறாமையினால் தூஷிப்பவர்களை எப்படித் திருத்துவது?

குருபரம்பரா ப்ரபாவத்தில் சுவையான ஒரு சம்பவம்.

ஸ்ரீநம்பிள்ளை பகவத் விஷயம் அருளிச் செய்து கோஷ்டி கலைந்து போகும்போது, அங்கே வந்த மன்னன், போகின்ற பெருந்திரளைப் பார்த்து, "நம் பெருமாள் திருவோலக்கம் கலைந்ததோ? நம்பிள்ளை கோஷ்டி கலைந்ததோ?" என்று வியப்புடன் கேட் டான். அவ்வளவு பெருமை வாய்ந்தது நம்பிள்ளை காலக்ஷேப கோஷ்டி.

ஸ்ரீமுதலியாண்டான் திருப்பேரனார், கந்தாடை யாண்டான் குமாரர், கந்தாடை தோழப்பர், நம்பிள்ளையுடைய பெருமதிப்பையும், புகழையும் வைபவத்தையும் கண்டு அசூயைக்கு ஆட்பட்டார். ஒருநாள் பெருமாள் ஸன்னிதியில் பெருமாளை சேவித்துக் கொண்டிருக்கும்போது, நம்பிள்ளை பெருந்திரளான சிஷ்ய பரிவாரங்களுடன் அங்கு எழுந்தருள, தோழப்பர், பிள்ளையுடைய பெருமையைக் கண்டு பொறுக்க முடியாமல்,

காரணமின்றி சீறி பகவத் சன்னிதியிலேயே, அவரைப் பலவாறாக நிந்தனை செய்து தீர்த்தார். அதைக் கேட்ட நம்பிள்ளை, பதிலேதும் கூறாமல் பெருமாளைச் சேவித்து விட்டுச் சென்றார்.

இந்தச் செய்தியைத் தோழப்பரின் தேவிகள் கேள்விப்பட்டு, மிகவும் வருந்தி, தங்கள் திருமாளிகை யில் செய்ய வேண்டிய கைங்கர்யங்களைச் செய்யாமல் விட்டு விட்டுக் கிடக்க, அப்போது பெருமாளை சேவித்துவிட்டுத் திரும்பி வந்த தோழப்பர் வழக்கமாக அன்புடன் தன்னை வரவேற்றுக் கைங்கர்யங்கள் செய்யும் தேவிகள் வராமல் இருக்கவே, "உன்னைத் திருமணம் செய்து கொண்ட நாளிலிருந்து நீ என்னை அன்புடன் வரவேற்று வந்தாய், இன்று மட்டும் அலட்சியமாக இருப்பதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார்.

தேவிகள் சொன்ன பதில் : "ஸ்வாமி! ஆழ்வானின் திருவவதாரம் என்பது போல, பெருமாளுக்கு உயிராக உள்ள நம்பிள்ளையை, பெருமாள் சன்னிதியிலேயே நா கூசாமல் பலவிதமாக தூஷணை செய்ததுமல்லா மல், இப்படிச் செய்தோமே என்கிற வருத்தம் சிறிதுமின்றி வாழும் உம்மோடு எனக்கென்ன சம்பந்தம்? பாகவதர்களை நிந்தனை பண்ணினவர் களை ஒருக்காலும் மன்னிப்பதில்லை என்று பெருமாள் தாமே அருளிச் செய்த திருமுகப் பாசுரம் அறிந்தும், அறியாதவர் போலே இருக்கிற உம்மோடு எனக்கு சகவாசம் கூடாது; ஆகையாலே, நிலம் பிளந்தால் இழையிட ஒண்ணாதாப் போலவும், கடலுடைந்தால் கட்ட ஒண்ணாதாப் போலவும், மலை முறிந்தால் தாங்க ஒண்ணாதாப் போலவும், அநுதாபம்

பிறவாத பாகவத அபசாரம் தீர்த்துக் கொள்ளக் கூடாதீரே; ஆன பின்பு நான் என்னிஷ்டத்திலேயிருந்து ஈடேறிப் போகிறேன்'' என்று கூற, தோழப்பரும் பெரிய வித்வானாகையாலும், திருவம்ச பிரபாவத்தாலும், அசூயையால் வந்த திருவுள்ளத்தின் கலக்கம் தீர்ந்து, தெளிவு பெற்று, தேவிகளைப் பார்த்து, "நீ சொன்னதெல்லாம் சரியே! நான் தப்பு செய்து விட்டேன். இனிமேல் என்ன செய்வது?'' என்று கேட்க, தேவியாரும், "ஆற்றிலே கெடுத்துக் குளத்திலே தேடாதே, கெடுத்த இடத்தே தேடிக் கொள்ளீர். பரம தயாளுவான நம்பிள்ளை திருவடிகளிலே சென்று சேவித்து அபராதச் க்ஷாமணம் பண்ணிக் கொண்டு (குற்றங்களுக்கு மன்னிப்புக் கோரிக் கொண்டு) அவர் க்ருபை பண்ணி அருள ஈடேறீர்'' என்று கூற, தோழப்பரும், தேவிகளும் நம்பிள்ளை திருமாளிகை செல்லப் புறப்பட்டனர்.

இதற்கிடையில், நம்பிள்ளை தம்முடன் வந்திருந்த சிஷ்யர்களை அனுப்பிவிட்டு, பகல் முழுவதும் அமுது செய்தருளாமல் மாலை வந்ததும் அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, தன்னந்தனியாக, தலையிலே முக்காடிட்டுக் கொண்டு, தோழப்பர் திருமாளிகை வாசலிலே சென்று அங்கேயே கண் வளர்ந்தருள, தோழப்பரும் தேவியரும் நம்பிள்ளை திருமாளிகைக்குச் செல்வதற்காகத் தங்கள் திருமாளிகைக்கு வெளியே வந்தபோது வாசலில் ஒருவர் வெள்ளை முக்காடிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு, "இங்கு ஆர் கிடக்கிறார்?'' என்று கேட்க, நம்பிள்ளையும், "அடியேன் திருக்கலிக்கன்றி தாஸன்'' என்று கூற, தோழப்பர் திகைத்துப் போய் நம்பிள்ளையைப்

பார்த்து, "நாம் பெருமாள் சன்னிதியிலே உம்மைக் கோபத்துடன் பேசியதனால் வந்திருக்கின்றீரோ?" என்று வினவ, நம்பிள்ளை, "அடியேன் கோபம் கொள்ளவில்லை. பெரிய பெருமாள் சன்னிதியிலே, முதலியாண்டான் திருப்பேரரான தேவரீர் திருவுள்ளம் கலங்கும்படி நடந்து கொண்ட மகாபாவியான அடியேனுக்கு, தேவரீர் திருமாளிகை வாசலைத் தவிர வேறு கதியில்லை என்று வந்து கிடக்கிறேன்" என்று பதிலளித்தார்.

நம்பிள்ளையிடம் மன்னிப்புக் கேட்பதற்காக புறப்பட்டிருந்த தோழப்பர், இந்தப் பதிலைக் கேட்டதும் நம்பிள்ளையின் தன்னடக்கத்தையும் உயர்ந்த பண்பையும் கண்டு, மனம் மிகவும் நொந்து போய், நம்பிள்ளையை வாரியெடுத்து அணைத்துக் கொண்டு, "இப்படியும் ஒரு பண்பா! ஸ்வாமி! இவ்வளவு நாட்கள் தேவரீர் ஒரு சில பல பேருக்கு ஆசார்யன் என்றிருந்தேன். இப்போதுதான் தெரிந்து கொண்டேன், நீரே உலகுக்கெல்லாம் ஆசார்யன்" என்று மிகுந்த உவப்புடன் கூறி, நம்பிள்ளைக்கு "லோகாசார்யர்" என்ற திருநாமம் சார்த்தியருளினார்.

ஆக, நம்மீது அசூயை கொண்டு தூற்றுவாரிடம் நாம் எப்படி நடந்து கொண்டு அவரைத் திருத்திப் பணி கொள்வது என்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக் காட்டு.

குணங்களையும் குற்றமாகக் கொள்வதே அசூயையாதலால், அந்தத் தீய குணத்தை வென்றவர்கள் உலகில் தேடிப்பிடிக்க வேண்டிய நிலையிலுள்ளார்கள். உலகில் சகல விதமான வியாதிகளுக்கும் மருந்துண்டு; அசூயை எனும் வியாதிக்கு மருந்தே கிடையாது.

ஸ்ரீவேதாந்த தேசிகர், "ஸங்கல்ப சூர்யோதய"த்தில் அருளியுள்ளது போல, அசூயாதேவி சோர்வு, சோம்பலால் உறங்கிப் போனால்தான் பகவானே குணசாலி என்று பேர் வாங்க முடியும்; அந்த அசூயாதேவி உறங்காதவரை பகவானாலும் குற்றமற்றவன் என்கிற பெயர் பெற முடியாது.

தோஷம் என்பது சிறிதுமில்லாமலும், எல்லை கடந்த திருக்குணங்களுக்கும் உறைவிடமான ஸ்ரீராம பிரானையே சிலர், பெண்ணைக் (தாடகா வதம்) கொலை செய்தான் என்றும், வாலியை மறைந்திருந்து கொன்றான் என்றும் வசை கூறுகின்றார்கள்.

குணக்கடலான இராமனுக்கே இக்கதியென்றால் குணங்கள் கொஞ்சமும், குற்றங்கள் அதிகமாகவும் இருக்கும் நம்மைப் பார்த்து உலகம் வசை கூறுவது வியப்பல்ல.

குற்றங்களையே குணங்களாகக் கொள்வது வாத்ஸல்யம். இது அசூயைக்கு எதிர்த்தட்டு. இதைத் தான் ஸ்ரீநம்பிள்ளை, தோழப்பருக்கு எடுத்துக் காட்டினார்.

"எல்லாம் அவனருள். அவன் திருவுள்ளத்தின்படி நாம் ஒவ்வொருவரும் இயங்குகிறோம்" என்ற எண்ணம் உறுதியாக இருந்துவிட்டால், பொறாமை குணம் முழுவதுமாக நம்மைவிட்டு விலகிப் போகும், மாமுனிகளின் சொல்லுக்கும் பொருள் கிடைக்கும்.

# ப்ரீதியைத் துளிர் எழுப்ப

எம்பெருமானுக்குத் திருவிளக்கு எரிக்கை, திருமாலை தொடுக்கை முதலான கைங்கர்யங்களை, அவைகளை உபாயமாகக் கருதாமல், அவனது நிர்ஹேதுக (இயல்பான) க்ருபையையே, பேற்றுக்கு உபாயமாகக் கொண்டு வாழ்பவர்கள் ப்ரபந்நர்கள் எனப்படுவர்.

அவர்கள்,

**"செயல்தீர சிந்தித்து வாழ்வாரே வாழ்வர்"** என்று திருமழிசை ஆழ்வார் அருளியதுபோல,

**"காம்பறத்தலை சிரைத்து உன்கடைத் தலை யிருந்து வாழும் சோம்பர்"** என்று தொண்டரடிப் பொடி ஆழ்வார் கூற்று போலே வாழ்ந்து வருபவர்கள்.

உஜ்ஜீவனத்துக்கு (ஆத்ம உய்வுக்கு) **"இந்த ஆத்மா செய்யக் கூடியது ஒன்றுமில்லை; எம்பெருமானே நிர்வாஹகன்"** என்று அனுசந்தித்து, அவர்கள் செய்யும் கைங்கர்யம், தங்கள் உகப்புக்காக அல்லாமல், எம்பெருமான் உகப்புக்காகவே என்று அமைய வேண்டும்.

ஜீவாத்மா,

அவன் சொத்து.

அவனுடைய அடிமை.

அவன் அனுபவத்துக்காக அவனால் படைக்கப் பட்டது.

எசமானை மகிழ்விப்பது அடிமையின் கடமை. அனாதி காலமாக இருந்து வரும் ஜீவ - பர சம்பந்தம் ஒழிக்க ஒழியாதது.

மாறி மாறிப் பல பிறப்புக்களில் தொடர்ந்து வரும் கருமங்கள் முற்றிலுமாகத் தொலைந்து, ஜீவன் மீண்டும் அவனிடமே சேர, நம் அடிமை இயல்புக்கு ஏற்ப "ஒழிவில் காலமெலாம், உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும்". அடிமை செய்வதிலே நமக்கு இயல்பாக உண்டாகும் இன்பத்தை அவன் பொருட்டுக் களைய வேண்டும்.

இதற்கு நம்பிள்ளை, நமக்கு ஏற்படும் "ஆனந்தம், அவன் ப்ரீதியைத் துளிர் எழுப்ப" என்று மிக அழகாக விளக்கம்அளிக்கிறார்.

நாம் கைங்கர்யம் செய்யும்போது, இயல்பாக எழும் குணமாகிய இன்பத்தை "இல்லை" செய்துவிட முடியாது. ஆயினும், அவ்வானந்தமும், நம்மிடம் அவனது ப்ரீதியைத் துளிர் எழுப்பவே" என்று உணர்ந்து பணிபுரிதல் வேண்டும். அதுவே, 'கோது' இலா அடிமை செய்தல் ஆகும்.

நாம் நம் இயல்பான ஆனந்தத்தை (அனுகூல உணர்வை)க் காட்டிக் கொள்ளாவிட்டால், ஏதோ ஒரு மணைக்கட்டையை (அறிவற்ற பொருளை) அனுப விப்பதாக எம்பெருமானுக்குத் தோன்றுமே தவிர, ஞானத்தோடு கூடிய சேதனனை அனுபவிப்பதாக அமையாது. ஆகவே, நாம் கைங்கர்யம் செய்யும்போது ஏற்படும் ஆனந்தம் அவனுக்கு எதிர்விழி கொடுப்பதாக இருக்க வேண்டும். அவ்வளவுதான். "உற்றேன் உகந்து பணி செய்து" என்று இதனை ஆழ்வார் குறிப்பிடுவர். இந்த ஆனந்தம், எம்பெருமானுக்கு விளைகிற மகிழ்ச்சியை வளரச் செய்யும். கொழுந்து விடச் செய்யும் ஆனந்தம் என்பது நம்பிள்ளையின் கருத்து.

ஆக, நம் கைங்கர்யத்தாலே எம்பெருமானுக்கு ஏற்படும் ஆனந்தத்துக்கு உட்பட்ட நம் ஆனந்தத்தில் தவறில்லை. இதனால் அடிமைத் திறம் நிலைபெறும்.

சிறந்த மனைவியானவள் தன் கணவனுடைய மகிழ்ச்சியே தன் மகிழ்ச்சி என்று வாழ்கிறாள். கணவனுக்கு எது பிடிக்கும், எது பிடிக்காது என்ப தறிந்து அவனை உகப்பிக்கும் பணிவிடைகள் செய்து தானும் மகிழ்கிறாள். அதேபோல், ஜீவ - பர உறவிலே, ஒருவருக்காக மற்றவர் என்ற நெருக்கத்திலே சிறிது விரிசல் ஏற்பட்டாலும், எம்பெருமானின் உகப்பு பட்டுப் போய்விடும்.

"தனக்கேயாக பகவான் எனைக் கொள்ள வேண்டும்" என்ற ஜீவாத்மாவின் உணர்வே எம் பெருமான் பணியில் நீடிக்க வேண்டும்.

எம்பெருமானைப் பிரிந்த ஜீவன் மீண்டும் அவனைச் சேர ஏங்குகிறது. ஆனால், அவனது ஸ்வாதந்தர்யமும், இவனது சூழ்வினைகளும், தடையாக இருப்பதால், அவன் க்ருபையைப் பெற அவன் அருள் அல்லது அருளுமல்ல என்பதால், அவனோடு கலக்கும்போது, "அவன் ப்ரீதியைத் துளிர் எழுப்ப வேண்டும்" என்ற உணர்வே நமக்கு இயல்பாக எப்போதும் அமைய வேண்டும் என்பதால், நமக்கு ஏற்படும் சிறிது ஆனந்தமும் கைங்கர்யத்தில் கலந்து சிறப்பு எய்துகிறது.

"எனக்காக என்றோ, எனக்கும் அவனுக்கும் பொதுவாக என்றோ இல்லாமல் அவனுக்கே, அவனுக்காகவே கைங்கர்யம் செய்தல் என்பதே களை அறுத்த சீர் அடிமையாகும்". இதுவே சாரமான கருத்து.

# முடிவுரை
## "நானும் அவர்களும்"

கட்டுரைகளை 'நான்' எழுதினேன்.

பெற்றோர்கள் திண்டிவனம் வழக்கறிஞர் அமரர் P.T.சடகோபாச்சாரியார் - கமலம் அம்மாள் பெற்றெடுத்து வளர்த்ததால் அவர்களுடைய அறிவும், ஆற்றலும், குணங்களும் அடிப்படையாக அமைந்தன.

அவைகள் பள்ளி, கல்லூரி ஆசிரியர்கள், நண்பர்களால் தாக்கப்பட்டு ஓரளவு மாறின.

வழக்கறிஞர் தொழிலும், சீனியர்கள் அமரர் ஆர். கோபாலஸ்வாமி ஐயங்கார், அமரர் கே. நாராயண ஸ்வாமி முதலியார், மற்றும் பலராலும் இன்னும் கொஞ்சம் மாற்றப்பட்டேன்.

காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராச் சாரியார் ஸ்வாமிகளின் எழுத்தாலும், வேளுக்குடி ஸ்ரீ வரதாச்சாரியார் ஸ்வாமி, நாவல்பாக்கம் ஸ்ரீ வரதாச்சாரியார் ஸ்வாமி, போன்றோரின் உபன்யாஸ காலக்ஷேபங்களாலும் மேலும் கொஞ்சம் தாக்கப் பட்டேன்.

மந்த மதியினனாகக் கிடந்தபோது, தட்டி எழுப்பி 'ஓம் நமோ நாராயணாய' வின் பொருளை அடியேன் மண்டையில் ஏற்றி, எல்லாத் தத்துவங்களும் 'சித், அசித், ஈஸ்வரன்' என்கிற மூன்றிலே அடங்கிவிடும் என்று எடுத்துக்காட்டி, அடியேனை பல கிராமங்களுக்கு இழுத்துச் சென்று, தொண்டின் மேன்மையை உணர்த்தியவர் 'திருமால்' ஆசிரியர் செந்தமிழ் வேதியர் குமாரவாடி ஸ்ரீ சே. இராமானுஜாச்சாரியார்.

வைணவ அறிவை உரம் போட்டு வளர்த்தவர்கள் Dr. M. நரசிம்மாச்சாரி, Dr. V. K.S.N. ராகவன், Dr. M.A. வேங்கடகிருஷ்ணன். மறக்க முடியுமா?

பார்வை இழந்தாலும் தன்னலமற்ற பணியாற்ற முடியும் என்பதற்கு எடுத்துக் காட்டாக இன்று திகழ்பவர் 'வேதம்' ஸ்ரீ சத்தியமூர்த்தி ஸ்வாமிகள்.

ஸாத்வீகமே! உன் மறு பெயர் தான் அமரர் புரிசை ஸ்வாமியோ? திருப்பதி கிருஷ்ணமாச்சாரி ஸ்வாமியோ? அடியேனை ஈர்த்த மஹா புருஷர்கள்.

இவ்வளவு இருந்து என்ன பயன்? மனைவி மக்கள் சற்றேனும் ஏறுமாறாக இருந்துவிட்டால் என் செய்வது? இல்லாள் லக்ஷ்மி ராமஸ்வாமியும், மக்களும் தடங்கலில்லாமல் இருந்தது மட்டுமல்ல, அடியேனுடைய எல்லாப் பணிகளிலும் உற்ற துணையாக இருந்து, அடியேனுக்கு மன வீழ்ச்சி யில்லாமல் பாதுகாத்தனர்.

ஆக, மேலே குறிப்பிட்ட சிலருடைய, இன்னும் பலருடைய அறிவு, ஆற்றல்களையும், குணங்களையும் சேர்த்து, ஆசார்யன் கடாக்ஷத்தால் நன்றாக சமைக்கப் பட்டு, எம்பெருமான் திருவருளால் ஒரு பொருளாக உருவாக்கப்பட்டவன்தான் அடியேன்.

அப்படியிருக்க, கட்டுரைகளை 'நானா' எழுதி னேன்? அகங்காரம் என்ன வேண்டிக்கிடக்கு?

குறைகள் அடியேனுக்கே உரித்தானது.



## நூலாசிரியரைப் பற்றி :

- 1957ம் ஆண்டிலிருந்து சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞர்
- வழக்கறிஞர் பயிற்சியின் போது (Apprentice) "Legal Practitioner's power to compromise" என்கிற ஆராய்ச்சி கட்டுரைக்காக K.V. Krishnaswamy Endowment Prize, Bar Council வழங்கியது.
- மூத்த வழக்கறிஞர்கள் அமரர் திரு. R. கோபாலஸ்வாமி ஐயங்கார், அமரர் திரு. K. நாராயண ஸ்வாமி முதலியார் ஆகியோரிடம் சுமார் 10 ஆண்டுகள் ஜூனியராகப் பணி.
- அமரர் திரு. முத்துராமலிங்கத் தேவரின் வழக்குகள், காங்கிரஸ் கட்சியின் சத்யமூர்த்தி பவன் வழக்கு போன்ற பல வழக்குகள், குன்றக்குடி மடத்துக்காக பல வழக்குகள் மற்றும் பல சிவில் வழக்குகள் நடத்தியது.
- சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதுகலை (M.A.) (வைணவத்தில்) தேர்ச்சி பெற்று, முனைவர் (Ph.D.) (வைணவம்) பட்டம், "Judicial Solutions for Temple Disputes - a Critical Analysis" என்கிற ஆராய்ச்சி நூலுக்காக வழங்கப்பட்டது.
- திருப்பாவை, திருமாலை உபன்யாஸங்கள், வைணவ சம்பிரதாய சொற்பொழிவுகள், 'திருமாலி'ல் கட்டுரைகள், சில கிராமங்களில் பிரசாரத்திற்காக வைணவப் பேரவை, திருமாலடியார் குழாத்துடன் சென்றது முதலிய பணிகள்.
- விகடன், குமுதம், அமுதசுரபி பத்திரிகைகளில் சிறுகதைகள், வானொலி, தொலைக்காட்சி நாடகங்கள் எழுதியது.
- 2001ல் இரு கலைகளையும் (வடகலை, தென்கலை) சேர்ந்த ஜீயர் ஸ்வாமிகளை ஒரே மேடையில் கூட்டி வைணவ ஒற்றுமைக்காக 'ஸ்ரீவைஷ்ணவ யதி ஸம்மேளனம்' என்கிற அமைப்பை உருவாக்கியது.
- 'திருமால்' பத்திரிகையின் கௌரவ ஆலோசகர்.